KALKI 19.9.93 ரூ. 3.00

# கல்கி



# யானை வருது; போன் பண்ண வருது...!



**பி.**சி.ஓவில் பேசிக் கொண்டிருந்த சிலரிடம், படத்தைக் காட்டிய போது முதலில் திகைத்தார்கள். பிறகு, "நல்ல வேளை, படம்தான் சார்! நிஜமாகவே வந்துட்டால் உதறல்தான்" என்றார்கள். அப்புறம் ஆளாளுக்கு கமெண்ட் அடிக்க ஆரம்பித்தார்கள்!



* கிறிஸ்டோபர்

**கிறிஸ்டோபர் :** என்னடா இதுக்கும் கேர்ல் ஃபிரெண்ட் இருக்கோ? இவ்வளவு பொறுமையா காத்துக்கிட்டிருக்கே, போன் பேச?



* பி. சுகுமார்

**பி. சுகுமார் :** தங்கள் தானைத் தலைவர் விநாயகருக்கு போன் போடக் காத்துக்கிட்டிருக்குன்னு நினைக்கறேன். "தேவ லோகத்துக்கெல்லாம் எஸ்.டி.டி. போட முடியாதும்மா, ஸாரி!"

**பாலசுப்ரமணியன் :** டிரங்க் கால் பண்ண வந்திருக்கும்னு நினைக்கறேன். 'Trunk-call!

**ஜெயலட்சுமி :** 'நான் உள்ள நுழையறது கஷ்டம்; டெலிபோனை வெளில கொண்டு வா'ன்னு கேக்கறதுன்னு நினைக்கறேன்.

**ரகுநாதன் :** (உள்ளே பேசிக் கொண்டிருந்த தன் நண்பரைக் காண்பித்து) 'எப்படா நம்ம கிரி, டபுள் ஆக்ஷன் பண்ண ஆரம்பிச்சான்'னு நினைச்சேன்!

**ஜார்ஜ் ஆண்டனி :** தண்ணி ஸ்டாக் இல்லை. ரெண்டு டாங்க் அனுப்புங்கன்னு மெட்ரோ வாட்டருக்கு ஃபோன் பண்ணக் காத்திருக்குது சார் யானை!

– துளசி

புகைப்படங்கள் : பாலாஜி



* ஜெயலட்சுமி



* ஜார்ஜ் ஆண்டனி



* ரகுநாதன்



"நீங்க பேச ஆரம்பிச்சாலே மக்கள்கிட்டே ஒரு இயக்கம் தோன்றுது தலைவரே!"

"அவ்வளோ உணர்ச்சிகரமாப் பேசறேன்னா சொல்றே...?"

"அதில்லே... கொட்டாவி விட்டுக்கிட்டே இருப்பாங்கன்னு சொல்லறேன்!"

– ராஜிராதா



"தலைவர் எப்பவும் வெடிகுண்டைப் பத்தியே நினைச்சிட்டிருப்பார்னு தோணுது!"

"எப்படி?"

"எல்லாரும், 'நெருப்புன்னா சுட்டுடாது'ன்னு சொல்லுவாங்க; தலைவர் அடிக்கடி 'குண்டுன்னா வெடிச்சிடாது'ன்னு சொல்றாரே!"

– சீர்காழி வி. ரேவதி

# பொய்யானாலும்

இடம் : கதாநாயகன் மாதுவின் வீடு

பாத்திரங்கள் : மாது, மாதுவின் மனைவி ஜானகி, மாதுவின் மச்சான் ராமானுஜம், மானேஜர், டெட்பாடி கோபால் சாமி, நண்பன் சீனு, கோயம் புத்தூர் கோபால் சாமி, ஒருவன், மற்றொருவன்.

ராமானுஜம் : ஒரு நிமிஷம் சீனு! மாப்பிள்ளை ஏன் இன்னிக்கு லீவுன்னு மானேஜர் காரணம் கேட்டு இருப்பாரே, சொன்னியா?

சீனு : கேக்கறாங்களே, சொல்லிடவா?

ராமா : மறுபடியும் பொய்யா?

சீனு : மாது சொல்லச் சொன்னதை அப்படியே சொன்னேன். மாது வீட்டுல அவர் தங்கச்சியைப் பெண் பார்க்க வராங்களாம்! அதனால் லீவாம்னு சொன்னேன்.

ஜானகி : இவரோட தங்கையா? உங்களுக்கு ஏதுன்னா தங்கை?

மாது : அட, பொய் தான்டி! டக்னு தோணித்து!



சொன்னேன். இதுக்காக ஒய்ஃபுனு சொல்ல முடியுமா?

ராமா : என்ன மாப்பிள்ளை! ஒரு சின்ன அல்ப்ப விஷயம், ஆபீஸ்ல ஒருநாள் லீவு! இதுக்கு இப்படியா பொய் சொல்லுவாங்க? ஏதோ... இந்த மட்டும் நான் செத்துப் போயிட்டதா சொல்லாம இருந்தீங்களே.

மாது : இன்ஃபெக்ட், மொதல்ல அது தான் சொல்றதா இருந்தேன். ஆனா, ஒரு நாள் லீவுக்காக அதை வேஸ்ட் பண்ண வேண்டாம். பத்து நாள் லீவுக்கு சொல்லிக்கலாமேன்னுதான் விட்டுட்டேன்.

ராமா : மாப்ளே! பொய்க்கறது தொத்து வியாதி மாதிரி பரவும்! ஜாக்ரதை! நான் வறேன்.

(ராமானுஜம், ஜானகி, வெளியே போதல்)

மாது : என் மச்சானும், பொண்டாட்டியும் அனாவசியமா பயப்படறாங்க.

# புருஷன்!

என்ன... என் தங்கச்சியப் பெண் பார்க்க வரதா சொன்னேன். மானேஜர் என்ன, வேலை மெனக்கெட்டு இங்க வந்து பாத்துட்டாப் போகப் போறார்?

சீனு : ஆமா வாத்தியார், மானேஜர் அவசியம் இந்த ஃபங்ஷன்ல கலந்துக்கறேன்னு சொல்லிட்டாரு.

மாது : மானேஜர் வீட்டு டெலிபோன் நம்பர் என்னடா?

சீனு : 838631. வரட்டா, ஆல்தி பெஸ்ட். (சீனு வெளியே போதல்)

மாது : (838631 டயல் செய்கிறான்)

மானேஜர் குரல் : ஹலோ!

மாது : சார்... நான் மாது பேசறேன்.

மானேஜர் : சொல்லுப்பா. சீனு சொன்னான், உன் தங்கைய இன்னிக்குப் பெண் பார்க்க வராங்களாமே! வெரி கிளாட்!

மாது : சார், என் தங்கையப் பெண் பார்க்க வராங்கன்னு சொன்னேனில்லையா, அது கேன்சல் ஆயிடுத்து!

மானேஜர் : கேன்சல் ஆயிடுத்தா? ஏன்?

மாது : ஆமாம் சார். வீட்டுல ஒரு அசம்பாவிதம் நடந்துருக்கு.

மானேஜர் : அசம்பாவிதம்னா?

மாது : அசம்பாவிதம்னா... (போனில் வாயைப் பொத்தி) என்ன சொல்றது... ஆ... சார்... வீட்டுல ஒரு டெத் நடந்துடுத்து சார்!

மானேஜர் : வாட்? டெத்ஆ? ஐயம் எக்ஸ்ட்ரீம்லி சாரி மாது. யார் செத்துப் போய்ட்டாங்க?

மாது : அது வந்து... (போன் பொத்தி) சட்டுனு தோணமாட்டேங்குதே... ஆ... என்னோட ஒன்னு விட்ட மாமா சார். ஊர்லேந்து வந்திருந்தார். வந்த எடத்துல மண்டையப் போட்டுட்டார்.

மானே : எப்படி செத்தார்?

மாது : அது வந்து - காலைல மாடிப்படி ஏறச்சே ஒன்னு விட்டமாமா, படியை ஒன்னு விட்டு ஒன்னு விட்டு ஏறினார். அதுல தடுக்கி கீழ விழுந்து, தலைல அடிபட்டு சேத்துப் புண்ணு வந்து செத்துப்போய்ட்டார். அதனால நீங்க வர வேண்டாம்.

மானேஜர் : இல்ல மாது. நா வரேன்.

மாது : சார்!

மானேஜர் : மாது.. நீ என் கீழ வேலை பார்க்கற ஸ்டாஃப்! உன் சந்தோஷம் என் சந்தோஷம்! உன் துக்கமும் என் துக்கம்தான். கல்யாணத்தைக் கூட விட்டுக் குடுக்கலாம், ஆனா கருமாதிய விடவே கூடாது. நான் அவசியம் வந்து கலந்துக்கறேன்.

மாது : சார்!

மானேஜர் : ஒன்னு விட்ட மாமா பேர் என்ன?

மாது : பேரா சார்... வந்து... கோபால் சாமி...

மானேஜர் : பாடி வீட்டுலதான இருக்கு?

மாது : யார் பாடி சார்?

மானேஜர் : கோபால்சாமி பாடிப்பா....

மாது : ஆமா சார்! பாடி வீட்டுல தான் இருக்கு. நீங்க வேணா அவரோட பேசறீங்களா.... ஐய்யோ எப்படிப் பேச முடியும்? சார் நீங்க வர வேண்டாம் சார்!

மானேஜர் : மாது! ஒரு முக்கியமான விஷயம்! பாடியைச் சுத்தி ஐஸ் வை. உங்க ஏரியால ஐஸ் கிடைக்குமா?

மாது : (போனைப் பொத்தி) பாடியே கிடைக்கலை இன்னும். நான் ஐஸ்க்கு எங்க போவேன். நான் அட்ஜஸ்ட் பண்ணிக்கறேன் சார். கிடைச்சா சொல்றேன் சார், நீங்க வரவேண்டாம் சார்... சார்... சார்.... சே!... வெச்சுட்டாரு. மானேஜர் வரத்துக்கு 1/2 மணி ஆகும். அதுக்குள்ள செத்துப் போன கோபால்சாமியும் துக்கம் விசாரிக்க ரெண்டு பேரையும் அரேஞ் பண்ணனும். இந்த சமயம் பாத்து சீனு வெளில போயிட்டான். ஜானகி! நான் ஒரு அவசர வேலையா வெளியே போய்ட்டுவர்றேன்.

(வெளியே போதல். ஜானகி வந்து பார்க்க)

ஜானகி : அதுக்குள்ள போயாச்சா...

ராமா : (வந்து) மாப்பிள்ளை எங்க?

ஜானகி : யாரோடயோ போன்ல பேசிட்டிருந்தார். திடீர்னு அவசர வேலையா வெளியில போறேன்னு சொல்லிட்டு ஓடிட்டார். போகட்டும். அது சரி, நீ எதுக்கு அமர்க்களமா டிரெஸ் பண்ணிட்டிருக்கே?

ராமா : உன் புருஷன் வெளில போனது நல்லதுதான். இருந்தா, எதையாவது பேசி குட்டையைக் கொழப்பிடுவார். இன்னிக்கு கோயம்புத்தூர்லேர்ந்து கோபால்சாமின்றவர் வரதா சொல்லிருக்கார். எனக்குப் பெண்ணைப் புடிக்க போச்சன்னா அலயன்ஸ் முடிச்சுடலாம்னு... சொல்லிருக்

கிரேஸி மோகன்

கார். மாப்பிள்ளை வரத்துக்குள்ள கோயம் புத்தூர் கோபால்சாமி வந்துட்டா வசதியா இருக்கும்!

(காலிங் பெல் சத்தம்)

ராமா : கோயம்புத்தூர் கோபால் சாமின்னுதான் நினைக்கிறேன்.

(கோயம்புத்தூர் கோபால்சாமி வருதல்)

கோபால் : No. 5, சிவராமன் தெரு. மைலாப்பூர்....?

ராமா : இதுதான்... நீங்க?

கோபால் : கோயம்புத்தூர் கோபால் சாமி... ராமானுஜம்கறது....?

ராமா : வாங்கோ... வாங்கோ... நான் தான் ராமானுஜம். Please sitdown. என்ன பழம், பாக்கு வெத்தலையோட Setup ஆ வந்துட்டேளா?

கோபால் : ஆமாம், பொண்ணு போட் டோவோட வந்திருக்கேன். பார்த்து, புடிச் சிருந்தா சொல்லுங்கோ. பழம், பாக்கு வெத் தலையெல்லாம் மாத்திக்கலாம். எனக்கு இந்த நட்சத்திரம், ஜாதகம் இதெல்லாம் நம் பிக்கையே கிடையாது. ஆனா சகுனத்தில் Strong ஆன நம்பிக்கை உண்டு.

ராமா : சார் பொண்ணு போட்டோ....!!

கோபால் : (தந்து) புடிச்சிருக்குன்னு வெட்கப்படாம சொல்லுங்கோ. இப்பவே பழம், பாக்கு, வெத்தலை மாத்திக்க லாம்.

ராமா : ஒரு நிமிஷம்! என் தங்கையும் பார்த்துச் சொல்லட்டும். ஜானகி போட் டோவப் பாரு.

(காலிங் பெல் சப்தம்)

ராமா : (மகிழ்ச்சியுடன்) ஐ. காலிங் பெல் சத்தம். நல்ல சகுனம்.

கோபால் : நோ, நோ, காலிங் பெல் லெல்லாம் சகுனத்தில சேர்த்தி கிடையாது! இதே, கோவில் மணி சொல்லுங்கோ - சகுனம்!

ராமா : இதுக்காக வீட்டு வாசல்ல கோவில் மணியா கட்டித் தொங்க விட முடி யும்?

(ஒருவன் நுழைந்து வாயில் துண்டை வைத்தபடி வருகிறான்.)

ராமா : நீங்க...?

ஒருவன் : No. 5, சிவராமன் தெரு. மயிலாப்பூர், மாது வீடு...?

ராமா : இதுதான், நீங்க?

(அழுகிறான்)

ராமா : ஏன் சார் அழறீங்க?

ஒருவன் : இந்த வீட்டுல ஒரு டெத் நடந் ததாக் கேள்விப் பட்டேன். அதான் துக்கம் விசாரிக்கட்டுப் போலாம்னு வந்தேன்.

ராமா : Death ஆ? என்ன உளர்ற?

கோபால் : இந்த வீட்ல சாவா? சிவ சிவ! என்ன ராமானுஜம் இது? பாக்கு,



வெத்தல மாத்தும் போது சாவு கேஸ்னு அப சகுனமா போசறான்?

ராமா : டேய், ஏதாவது அட்ரஸ் மாறி வந்துட்டியா?

ஒருவன் : இல்ல இல்ல, சரியான அட்ரஸ்தான். இங்க யாரோ கோபால்சாமி செத்துட்டாராமே.

கோபால் : ராமானுஜம்! என்னது? யோவ் நான்தான்யா கோபால்சாமி!

ஒருவன் : நீதான் கோபால்சாமியா, அப்ப நீ இன்னும் சாவலியா?

ராமா : என்னடா உளர்ர?

(காலிங் பெல்)

கோபால் : நான் சொல்லல்ல? calling bell சத்தம்னாலே அபசகுனம்தான்.

ராமா : நீங்க வேற கொழப்பாதீங்க சார்...!

மற்றொருவன் : No. 5, சிவராமன் தெரு. மயிலாப்பூர்...?

ஒருவன் : மாது வீடு இதுதான், வா மச்சி!

மற்றொருவன் : (அழுது) கோபால்சாமி செத்துப் பூட்டாராமே! (என்று கோபால் சாமியிடம் விசாரிக்க)

கோபால் : நான்தான்யா கோபால்சாமி!

மற்றொ : நீதான் கோபால்சாமியா? அப்ப நீ இன்னும் சாவலியா. இதபார்! இன் னும் 5, 6 இடத்தில துக்கம் விசாரிக்கப் போகணும். சரியாச் சொல்லு! எப்ப சாவ?

ராமா : யோவ்! என்னய்யா இதெல் லாம்? யாருய்யா நீங்க?

(காலிங் பெல்)

கோபால் : ஐயய்யோ காலிங் பெல், சாவு மணி மாதிரி அடிக்கிறதே!!!

ராமா : நீங்க டென்ஷன் ஆகாதீங்க, ஏதோ கொழப்பம் நடந்திருக்கு.

(Dead body கோபால்சாமி நுழைதல்)

டெ.பா. கோபால் : No. 5, சிவராமன் தெரு. மயிலாப்பூர். மாது வீடு?

ராமா : ஆமா இதுதான். நீங்க....?

டெ.பா. கோபால் : சொல்றேன்! மொதல்ல நான் எங்க படுத்துக்கறது?

ராமா : படுத்துக்கறதா? நீ எதுக்குப்பா எங்க வீட்ல படுத்துக்கணும்?

டெ.பா. கோபால் : ஒக்காந்து சாவறது

"இவ்வளவு நேரமாகத் தட்டி எழுப்பியும் டெஸ்பாட்ச் குப்புசாமி எழுந்திருக்கலையே!"

"ஒரு பத்து பைசா நாணயம் இருந்தால் கீழே போடுங்க. சில்லறை சப்தம் கேட்டால்தான் முழிச்சிப் பார்!"

- வேதபுரி எஸ். ரமேஷ்.

உங்க வழக்கத்துல உண்டா?

ராமா : ஒக்காந்து சாவறதா, என்ன எழவுடா இது? யார்ரா நீ?

டெ.பா. கோபால் : நான்தான் டெட் பாடி!

ராமா : என்னது, டெட் பாடியா?

டெ.பா. கோபால் : நான்தான் செத்துப் போகப் போற கோபால்சாமி! (கோயம்புத்தூர் கோபால்சாமியைப் பார்த்து) ஸார் யாரு?

ஒருவன் : அவரு உசிரோட இருக்கப் போற கோபால்சாமி.

ராமா : இப்ப நீங்க மூணுபேரும் வெளில போறீங்களா, இல்ல செருப்பால அடிக்கட்டுமா?

டெ.பா. கோபால் : இதபார். எது பேசறதா இருந்தாலும், மாது வந்தப்புறம் பேசிக்கோ?!

ராமா : அப்ப உங்களை அனுப்பிச்சதே மாப்ளதானா?

கோபால் : ராமானுஜம்! நான் என் பொண்ணுக்கு வேற இடத்துல பாத்துக்கறேன். ரொம்ப அபசகுனமா இருக்கு! நான் கிளம்பறேன்!

(மாது நுழைதல்)

ஜானகி : என்னன்னா இதெல்லாம்?

மாது : மன்னிக்கடு ஜானகி. வீட்ல என் தங்கையைப் பொண்ணு பார்க்க வர்றதா, மானேஜர் கிட்ட சொன்னேன் இல்லையா. அவரும் அவசியம் வர்றதா சொல்லிட்டாரு. அவர் வராம தடுக்கறதுக்காகத்தான் வீட்ல ஒரு சாவுன்னு சொல்லிட்டேன். டெத்துக்கும் வரேன்னு சொல்லிட்டாரு. எனக்கு வேற வழி தெரியலே. மானேஜர் இங்க வரும் போது இங்க ஒரு சாவு விழுந்த மாதிரி எல்லாரும் துக்கமா இருக்கணும். ஏதாவது சொதப்பிட்டீங்கன்னா, வேலை போயிடும். நாம நடுத்தெருவுலதான் நிக்கணும்!

ஜானகி : என்ன இப்படி பொய் மேல் பொய் சொல்றீங்க?

மாது : மானேஜர் எது பேசினாலும் நான் சமாளிக்கடுவேன். கண்டுக்காம இருங்க. ஆமா, உங்கள்ள யாரு கோபால்சாமி?

கோபால் : நான்தான்...

ராமா : நீ உட்காருய்யா. நீ ஏன்யா இந்த ஆட்டத்துல கலந்துக்கறா?

டெ.பா. கோபால் : நான்தான் டெட் பாடி கோபால்சாமி!

மாது : மச்சான், சாரைத் தெரியாதா? நிறைய படத்துல பொணமா நடிச்சிருக்காரு. பொணமா நடிக்கறதுல எக்ஸ்பர்ட். பேர் மணவாளன். சினிமா வட்டாரத்துல இவரைப் பொணவாளன்னு கூப்பிடுவாங்க. ஏன்யா நிக்கற? போய்ப் படுத்துக்கோ. இந்த மாலையைப் போட்டுக்கோ. இங்க பாருங்க. இங்க படுத்துக்கறவர்தான் ஒண்ணு விட்ட மாமா கோபால்சாமி. மானேஜர் கேட்டா எல்லாரும் அதையே தான் சொல்லணும். ஆமா இவர் யாரு?

ராமா : மாப்பிள்ளை! உங்களால என் வாழ்க்கையே பாழாயிடும் போலிருக்கே?

(காலிங் பெல்)

மாது : மானேஜர்தான்! சோகமா இருங்க. உன் புருஷனுக்கு வேலை பூடும் ஜானகி!! மச்சான்! உன் தங்கை புருஷனுக்கு வேல பூடும்!!

(மானேஜர் வருதல்)

மானேஜர் : ஸாரி மாது!!

மாது : பரவால்ல சார்!

மானேஜர் : உன்னோட.... என்ன உறவுன்னு சொன்ன....?

ஒருவன் : ஒண்ணுவிட்ட சித்தப்பா....

மானேஜர் : ஒண்ணுவிட்ட மாமான்னு சொன்னியே!

மாது : அது வந்து சார்... எனக்கு ஒண்ணு விட்ட மாமா... அவருக்கு ஒண்ணு விட்ட சித்தப்பா.

மானேஜர் : நான் எவ்வளவோ சாவுகளுக்குப் போயிருக்கேன். ஆனா இது மாதிரி ஒரு சாவு பாத்ததே இல்ல. பாத்தா செத்த மாதிரியே தெரியலயே?

மாது : ஏன் சார்?

மானேஜர் : நான் மலர் வளையம் வைக்கும் போது டெட் பாடியோட கால் என் கைல பட்டுது. சாதாரணமா செத்துப் போன பாடி, ஜில்லுன்னு ஆயிடுமே. இவர் ஏன் கடகட செத்து இருக்கிறார்?

மாது : அவர் சாவறத்துக்கு முன்னாடி, சூடா வென்னீரில் குளிச்சிட்டு கடகட காப்பி சாப்பிட்டிருக்கார். அதான் அந்த சூடு, பாடில அப்படியே இருக்கு.

(டெட்பாடி கோபால்சாமி தும்முகிறார்)

மானேஜர் : என்னது இது! டெட்பாடி தும்மின மாதிரி இருக்கு?

மாது : அதெல்லாம் ஒண்ணும் இல்ல! உங்களுக்கு பிரமை சார். பாடி எப்படி சார் எழுந்து தும்மும்?

மானேஜர் : அதுவும் சரிதான். ஆனா...

மாது! நீதான் ரொம்பப் பாவம். உனக்குத்தான் எவ்வளவு துக்கம்! ஒன்னுவிட்ட மாமா போன துக்கம். இந்த சமயம் பார்த்து உன் தங்கையோட நிச்சயதார்த்தமும் நின்னு போச்சு... வாழ்க்கைல துக்கம் மேல துக்கம் வரும்! நம்மதான் சமாளிக்கக்கணும்.

மாது : ஏதோ என்னால முடிஞ்ச வரைக்கும் எல்லாத்தையும் சமாளிச்சுண்டு வரேன் சார்.

மானேஜர் : (ஜானகியைப் பார்த்து) இப்படி வாம்மா. மாது. இது யாரு?

மாது : அது வந்து... என்னோட தங்கை ஸார். அவளைத்தான் இன்னைக்குப் பெண் பார்க்க வர்றதா இருந்தாங்க.

மானேஜர் : உன் தங்கையா? நீ சொல்லவே வேண்டாம். அச்சு உன் ஜாடை! நீ கவலையே படாதம்மா. உனக்கு வேற இடத்துல கல்யாணம் நடக்கும்!!

ஜானகி : என்ன உளர்றீங்க?

மாது : ஜானகி... நீ ஏதாவது உளறாத.



"நாம போட்ட கையெழுத்தை எல்லாம் தலைவர் லேபுக்கு அனுப்பிட்டாராம்!"

"ஏன்?"

"உண்மையாவே ரத்தக் கையெழுத்துதானான்னு சந்தேகப்படறார்!"

- அம்பை தேவா.

இந்தப் பையன் இல்லைன்னா இன்னொரு பையன் வருவான். ஆனா, வேலை போனா போனதுதான்மா! திரும்ப வரவே வராது!

மானேஜர் : மாது! உன் ஒய்ஃப் எங்க?

மாது : ஜானகி, ஒய்ஃப் எங்கன்னு கேக்கறார், மானேஜர்! சொல்லிடவா? தலைக்கு மேல வெள்ளம் போயிடுச்சு! இனிமே ஒண்ணும் பண்ண முடியாது. (மானேஜரைப் பார்த்து) ஸார், என் வொய்ப் ஆஸ்பிடல்ல இருக்கா ஸார்!

மானேஜர் : ஆஸ்பத்திரில இருக்காளா? ஏன் என்னாச்சு?

மாது : அவளுக்கு ஹார்ட்ல ஒரு வால்வு சரியா வொர்க் பண்ல! நான்தான் டெய்லி ஆஸ்பத்திரிக்கும் ஆபீஸுக்கும் அலையறேன். அதான் பாதி நாள் ஆபீஸுக்கு லேட்டா வரேன் ஸார்!

மானேஜர் : இதை ஏன் என்கிட்ட முன்னாலயே சொல்லலே?

மாது : ஒவ்வொண்ணா சொல்லும் போது, இதையும் சொல்ல வேண்டியதாப் போச்சு!

மானேஜர் : சே! பாவம் மாது! இந்த சின்ன வயசுல எப்படித்தான் இவ்வளவு துக்கத்தையும் தாங்கிண்டு சந்தோஷமா சிரிச்சுப் பேசிண்டிருக்கியோ?

(ஜானகி அழுதபடி உள்ளே போக)

மானேஜர் : என்ன, உங்க தங்கை அழுதுண்டே உள்ளே போயிட்டா?

மாது : என் ஒய்ஃபும் அவளும் ரொம்ப க்ளோஸ். இவளைப் பார்த்தா அவளைப் பார்க்க வேண்டாம். அவளைப் பார்த்தா இவளைப் பார்க்க வேணாம். அவ ஆஸ்பத்திரில இருக்கான்னு சொன்னவுடனே இவளுக்குத் துக்கம்... அதான் அழுதுண்டே....

ராமா : மாப்பிள்ளை! போறும். என்னால இதுக்கு மேல பொறுத்துக்க முடியாது!

மானேஜர் : என்ன சொல்றார் இவர்?

மாது : துக்கம்! துக்கத்தை இதுக்கு மேல பொறுத்துக்க முடியாது. தேம்பி தேம்பி அழுதுடுவேங்கறார்.

மானேஜர் : சாரி, வர்றேன் மாது!

(போகிறார்)

எல்லோரும் : அப்பா!!!

மாது : டேய்! மானேஜர் போயாச்சு. எந்திரிய்யா, யோவ்... என்னா நெஜமாவே பூட்டானா?

டெட்பாடி கோபால் : (எழுந்து) அசந்து தூங்கிட்டேன்.

மாது : இந்தா நூறு ரூபா....

டெட்பாடி கோபால் : அப்புறம் எதனா டெத் இருந்தா நம்பள மறந்துடாதே சார்.....

ஜானகி (வந்து) : என்னன்னா, எனக்கு ஹார்ட்ல பிராப்ளமின்னுட்டிங்க....

மாது : உனக்கா சொன்னேன்? உன்னைத் தங்கைன்னுதானே சொன்னேன்! என் ஒய்ஃபுக்கு ஹார்ட்லே பிராப்ளம்னேன். நீ அப்ப தங்கைதானே...

ஜானகி : நீங்க போற போக்கு சரியில்லை. இன்னிக்கு என்னைத் தங்கைன்னமாதிரி நாளைக்கு யாரையாவது ஒய்ஃபுன்னு சொல்லிடப் போறேள்!

மாது : அப்படியே சொன்னாலும் நம்ப நல்லத்துக்குத்தான் சொல்வேன். என்னோட பொய், நாரதர் கலகம் மாதிரி நன்மையில்தான் முடியும்!..

ஜானகி : நன்மையில் முடியறதுக்கு முன்னாடி இன்னும் என்னவெல்லாம் குழப்பங்கள் பாக்கியிருக்கோ, தெரியலையே! ஏழுமலையான்தான் காப்பாத்தணும்!

மாது : கொஞ்சம் பொறுத்துக்கோ ஜானகி. புல்லானாலும் புருஷன், கல்லானாலும் கணவன்ற மாதிரி பொய்யானாலும் புருஷன்னு என்னை நினைச்சுக்கோயேன்...!

*(கிரேஸியின் 'மீசையானாலும் மனைவி' நாடக ஸ்கிரிப்டிலிருந்து பிய்த்து எடுத்தது.)*

புகைப்படங்கள் : 'தேர்ட் ஐ'



# காஞ்சி மாமுனிவரின் நூற்றாண்டு விழா பட்டீஸ்வரம் ஸ்ரீதுர்க்காம்பிகைக்கு ஒரு கோடி அர்ச்சனை

(நவகோடி அர்ச்சனையில்)

கும்பகோணம் வட்டம், பட்டீஸ்வரம் அருள்மிகு தேனுபுரீஸ்வரர் திருக் கோயிலின் வடக்கு வாயிலில் எழுந்தருளியுள்ள, சோழ மன்னர்களின் காவல் தெய்வமாக அருள் பாலித்து வந்த, வேண்டுவோர்க்கு வேண்டுவன அளித்துக் காக்கும் அன்னையும், கலியுக தெய்வமுமாகிய அஷ்டபுஜ ஸ்ரீ துர்க்காம்பிகைக்கு நடைபெற்று வரும் நவகோடி அர்ச்சனையில், ஐந்தாவது கோடி அர்ச்சனைகள் சிறப்பாக நடை பெற்று வருகின்றன.

நடமாடும் தெய்வம் காஞ்சி மாமுனிவரின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு, உலக க்ஷேமத்திற்காக, காஞ்சி பெரியவரின் திரு நாமத்தின் பெயரால் அன்னாரின் ஜன்ம நட்சத்திரமான அனுஷ நட்சத்திரத்தன்று (24.8.93) துவங்கியுள்ள ஒரு கோடி அர்ச்சனையில் (நவகோடி அர்ச்சனையின் பகுதி) பங்கு கொள்ள அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

ஒவ்வொரு தினமும், தொடர்ச்சியாக, ஒரு லட்சார்ச்சனை செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொரு சகஸ்ர நாம அர்ச்சனைக்கு ரூ. 25/- ம் ஒவ்வொரு லட்ச்சார்ச்சனைக்கு ரூ. 2500/- ம் விதம் மணியார்டர்/செக்/டிராப்ட் மூலம் செயலாளர்/பொருளாளர், ஸ்ரீ துர்க்காம்பிகை நவகோடி அர்ச்சனை மற்றும் திருப்பணிக்குழு, பட்டீஸ்வரம் - 612 703, தஞ்சை மாவட்டம் என்ற முகவரிக்கு, "காஞ்சி மஹா சுவாமியின் ஒரு கோடி அர்ச்சனைக்காக" என்று குறிப்பிட்டு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

அன்பர்கள், அவரவர் சக்திக்கேற்ப, எவ்வளவு சகஸ்ரநாம அர்ச்சனைகளோ (அ) லட்சார்ச்சனைகளோ செய்து கொள்ள வசதி உண்டு. இந்த மாபெரும் வேள்வியில் கலந்து கொண்டு, காஞ்சி மாமுனிவரின் அருளாசியையும், ஸ்ரீ துர்க்காம்பிகையின் பேரருளையும் பெற அன்புடன் அழைக்கிறோம். சுமார் நான்கு மாதங்களில் நிறைவு பெற உள்ள இந்த ஒரு கோடி அர்ச்சனையின் பிரசாதங்கள் ஸ்ரீ காஞ்சி மடத்திற்கு அனுப்பப்படும்.

ம. இராமச்சந்திரன்
அறங்காவலர் குழு தலைவர்
ஏ.பி. சண்முகம்
எஸ். குழந்தைவேலு
எஸ். மஹாலிங்கம்
எஸ்.கே.ஆர். பானு
அறங்காவலர்கள்
சி. பிரம்மமுத்து
நிர்வாக அதிகாரி
ஸ்ரீ தேனுபுரீஸ்வரர் திருக்கோயில்
பட்டீஸ்வரம் - 612 703

வி.ஆர். கோபாலன்
வழக்கறிஞர் - தலைவர்
நவகோடி அர்ச்சனை & திருப்பணிக்குழு
இராம. கோவிந்தராஜன்
எஸ். காசிநாதன்
எஸ்.கே.ஆர். பானு
கே. இன்பராஜ்
வி. சொக்கலிங்கம்
எஸ். முருகையன்
கே. மதியழகன்
திருப்பணிக்குழு உறுப்பினர்கள்




# 'ராணி' - முதல் போணி!

'**பு**லி வருது' பூச்சாண்டியெல்லாம் ஓய்ந்து, ஒரு மாதிரியான 'சேஷன் செட்-அப்பில்', ராணிப்பேட்டை களம் காணத் தயாராகி விட்டது. உள்ளூர் டீக்கடை பெஞ்சுகளெல்லாம் CRPFக்கு குத்தகை விடப்பட்டிருக்கின்றன. லோக்கல் மாமாக்கள், முணுமுணுப்போடு மரத்தடியில் பல் குத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களது இந்தியும் இவர்களது தொந்தியும், கண்ணை மூடிக் கொண்டு கவிதை பாடத் தோன்றச் செய்யும் அநேக அநேக ஆறு வித்தியாசங்கள்.

இந்தியன் ஏர்லைன்ஸ் விமானங்கள் மாதிரி மணிக்கொரு தடவை 'கிளம்பும் நேரம்' தள்ளி வைக்கப்பட்டதாலோ என்னவோ மக்களுக்கு, தேர்தல் போரடிக்க ஆரம்பித்து விட்டது. பேப்பர்களின் முதல் பக்கத்தை அகவாரஸ்யமாகத் தள்ளிப் போகிறார்கள். கட்சிக்காரர்களே கூட இந்த மனோநிலையில்தான் இருக்கிறார்கள்.

தொகுதி மொத்தமுமாக அதிகம் போனால் நான்கு கட்-அவுட்களும் பத்து, பதினைந்து போஸ்டர்களும் மட்டுமே - ஜெ.வுக்கு. வேட்பாளர் மோகனன் பெயரை விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய நிலைமை. அவரே எதிரில் வந்து நின்றாலும் 'யார்யா நீ?' என்று கேட்கக்கூடிய பரிதாபம். ஒரு குட்டி போஸ்டர்? சுவர் கிறுக்கல்? ஆட்டோ கத்தல்? ஹூம்! எல்லோரும் ஒரு தடவை எழுந்து நின்று அனுதாபம் தெரிவியுங்கள்.

**சு**வர் ஆக்கிரமிப்பில் முதலிடம் ஆற்காடு வீராசாமிக்கு. எப்போதோ (அநேகமாக முதல் தடவை) அறிவித்த போது வெகு உற்சாகமாக ஒரு சுவர் பாக்கியில்லாமல் தொண்டர்கள் புகுந்து விளையாடியிருக்கிறார்கள். கொஞ்சம் கலைந்து, பழசாகிப் போனாலும் அதுவே இப்போதும். ('தேர்தல் நாள்' என்கிற இடத்தில் மட்டும் இரண்டு மூன்று தடவை அடித்துத் திருத்தியிருப்பது காண முடிந்தது.)

அவசியம் பரிதாபத்திற்குரியவர் காங்கிரஸ் வேட்பாளர் துளசி நாயக்கர். அவர் வீட்டு மனுஷர்களுக்கே கூட அவர் முகம் தெரியுமோ என்னவோ. ஊரில் ஒரு காங்கிரஸ் தொண்டர் கூட இல்லையோ என எண்ணும்படியாக விளம்பர வெற்றிடம்!

ஒருவேளை 'விளம்பரமே தேவையில்லாத மனுஷராக்கும்' என்று விசாரித்துப் பார்த்ததில் ''அதெல்லாம் போணியாகாத கேஸுங்க!''

* வீராசாமி



* மோகனன் : நல்ல பேரை வாங்க வேண்டும்



''இந்தத் தொகுதி வரலாற்றில் இதுவரை இரண்டே முறைதான் காங்கிரஸ் ஜெயித்திருக்கிறது. இந்திரா காந்தி இறந்த போது ஒரு தடவை; ராஜீவ்காந்தி இறந்த போது ஒரு தடவை'' என்று சிரிக்கிறார் முன்னாள் வாலாஜா ஒன்றியத் தலைவர் என். ரேணு.

காங்கிரஸ் என்றில்லை; தி.மு.க. தவிர வேறு எந்தக் கட்சியும் எப்போதும் ஜெயித்திராத ஏரியா ராணிப்பேட்டை. மக்கள் மத்தியில் ஆற்காடு வீராசாமிக்கு அநாயாசமான செல்வாக்கு தெரிகிறது. இன்னும் தி.மு.க. பிரசாரம் ஆரம்பிக்கப்படவில்லை (4, 5, 6 தேதிகளில்). மக்களுக்கு அது ஒரு அவசியமாகவே தெரியவில்லை.

''அவருக்கு எதுக்குங்க பிரசாரம்? அவர் என்ன லோக்கல் முகமா? ஸ்டேட் லெவல் ஃபேஸ் ஆர்சே?'' என்று ஒரு போடு போடுகிறார் ஆட்டோ டிரைவர் ஹயாத் பாஷா.

தி.மு.க. இந்த நிலையில் இருக்கிறதென்றால், அ.தி.மு.க. தனது வோட்டு வேட்டையை தினசரிகளில் புகைப்படங்களுடன் முன்னதாக போணி பண்ணிவிட்டது : ''ஜெயின் சூறாவளி சுற்றுப் பயணம். கொட்டும் மழையில் வோட்டு வேட்டை'' - நாளுகாலம் தலைப்பில் முதல் பக்கச் செய்திகள்.

தமது மாறாத ரெடிமேட் புன்னகையுடன் ஜெ., மூடிய வேனிலிருந்து மைக் மூலம் அண்ணா நாமத்தையும் புரட்சித் தலைவர் நாமத்தையும் நினைவுகூர்கிறார். காரை விட்டு இறங்காமல் எம்.ஜி.ஆர். சிலையை ரிமோட் கண்ட்ரோல் ஸ்டைலில் திறந்து வைக்கிறார்.


✱ ஜெ : இறங்காமல் பிரசாரம்!


✱ மழையில் தொடரும் பணி


✱ அங்கராவரம் : புறக்கணிப்பு

தமது மகத்தான இரண்டாவது நாள் பிரச்சாரத்தைப் பலத்த மழைக்கிடையே புளியந்தாங்கல் என்கிற 'லொடக்கு'ப் பிரதேசத்தில் அவர் ஆரம்பித்த போது எண்ணி ஐம்பது பேர் மட்டுமே லோக்கல் ஆடியன்ஸ். தலைக்கு, இரண்டு போலீஸ் பாதுகாப்பு! நான்கு மணிக்கு ஜெ. வருகிறார் என்று அறிவித்தும் மூன்று முப்பது வரை அதே ஐம்பது பேர்களைத் தவிர வேறு கும்பல் இல்லாதது கண்டு உள்ளூர் அ.தி.மு.க வினர் பதறி விட்டனர். என்ன செய்தார்களோ தெரியவில்லை. அடுத்த பத்தாவது நிமிடம் ரெண்டு லாரியில் இருநூறு பேர்!













அ.தி.மு.க.வின் மேல் மக்கள் மத்தியில் ஒரு அலட்சியப் பார்வை ஏற்பட்டிருப்பதற்கு அதன் வேட்பாளர் கோபி. எஸ். மோகனன் ஒரு காரணம். உதாரணமாக ஒரு சம்பவம் பார்க்கலாம்.

மலைமேடு - இது ராணிப்பேட்டையிலிருந்து எட்டு கி.மீ. தூரத்திலுள்ள மலையடிவாரப் பிரதேசம். ஆங்காங்கே நூறு நூறு குடும்பங்கள் ஒன்று சேர்ந்து ஒரு 'நகர்' என்று பெயர் வைத்துக் கொண்டு வாழும் புறம்போக்கு ஏரியா.

இங்கே எம்.ஜி.ஆர். நகரில் சுமார் 10-15 வருடங்களாக வாழும் மக்களுக்கு வீட்டு மனைப் பட்டா கிடையாது. தொழிற்சாலைகள் வளர்ந்து வரும் பகுதியாகையால் எந்த நிமிடமும் காலி பண்ணச் சொல்லி விடுவார்களோ என்று மக்கள் பயந்த நிலையில் இருக்கிறார்கள். எம்.ஜி.ஆர். காலத்திலிருந்து பட்டாவிற்காக முயன்று, இன்றளவும் கைகூடாமல், வரப் போகும் தேர்தலைப் புறக்கணிக்க முடிவு செய்து, புறக்கணிப்பு போர்டு நிறுவி, அறிவிப்பும் செய்து விட்டார்கள்.

இந் நிலையில் பிரச்சாரத்துக்குச் சென்ற மோகனன், இவர்கள் பகுதிக்கு விசிட் செய்ய, ஜனங்கள் தம் குறையைச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு அருமை அண்ணனின் பதில் என்ன தெரியுமா?

''கூரையைப் பிரிக்காத வரைக்கும் சந்தோஷப்படுங்க. பட்டா, கிட்டா கேக்கற வேலையை முதல்ல விடுங்க!''

''எவன் சார் இந்தாளுக்கு ஓட்டுப் போடுவான்?'' என்கிறது பகுதிவாழ் இளைய தலைமுறை.

அதன் பிறகு விஷயம் கேள்விப்பட்டு ஜெ. அவசர அவசரமாக வந்து பார்த்து என்னென்னமோ சொல்லிச் சமாளித்திருக்கிறார். (இதே காரணத்துக்காக அக்ராவரம் என்கிற கிராமத்து ஜனங்களும் தேர்தல் புறக்கணிப்பு செய்திருக்கிறார்கள்!)

பெரும்பாலான கிராமங்களில் மன்சூரலிகான் ரசிகர்கள் பெருகியிருப்பதால் பா.ம.க. பெயர், மொஃபஸல் பகுதிகளில் ஆங்காங்கே அடிபடுகிறது.

● என். சேஷு



● ஜுவேத் அகமது



வேட்பாளர் கே. எல். இளவழகனை அதிகமாக யாருக்கும் தெரிந்திருக்க வில்லை.

''ராமதாஸ் தெரியுங்க. இந்த... மர மெல்லாம் வெட்டிப் போடுவாரே, அவர் தானே... தெரியுங்க... ஆனா நம்மாளு (மன் சூர்) அதுல இருக்காரு. அதனால என் ஓட்டு அதுக்குத்தாங்க'' - இப்படியாகச் சிலர்.

இருந்தாலும், பா.ம.க. 'ஜகா' வாங்கும் சாத்தியக்கூறுகளும் தெரிவதால் 'அந்தச் சில ஓட்டுக்கள் ஆற்காட்டாருக்கே விழுகிற சாத் தியங்களும் தெரிகின்றன.

தி.மு.க., அ.தி.மு.க., பா.ம.க., காங் கிரஸ் வேட்பாளர்கள் தவிர சுயேட்சை களில் ஒரு 'பெருந்தலை' தென்படுகிறது. வாலாஜா அசேன். முன்னாள் தி.மு.க.காரர். தி.மு.க.விலிருக்கும் சிலர் கூட இவர்பால் அனுதாபம் கொண்டிருப்பது. இவரது பெயர் இன்னும் மறக்கப்படாமல் இருப்ப தற்கு சாட்சி.

இருபதாம் தேதி தேர்தல் என்பது அநேகமாக உறுதியான விஷயம். சூப்பர் சேஷன், தனது நிலையிலிருந்து சற்றும் இறங்கி வராது சொன்னபடி CRPF ஐ ராணிப் பேட்டைக்கு அழைத்து வந்து விட்டார். மொத்தம் 17 கம்பெனிகள். (ஒரு கம்பெ னிக்கு 136 பேர்.) அத்தனை பேரும் பள பளத்த துப்பாக்கிகளுடன் குட்டி டிரான் ஸிஸ்டரில் விவிதபாரதி கேட்டுக் கொண் டிருக்கிறார்கள்.

''இங்கிருக்கிற நிலைமை ஒன்றும் சிரமம் தரக்கூடியதாகத் தெரியவில்லை. முதலில் நாங்கள் அழைக்கப்பட்ட போது பஞ்சாபில் தேர்தல் நடக்கிற மாதிரியாக இருக்கும். ஏதோ பிரச்னை போலும் என்று தான் நினைத்தோம்.

''வந்தபின்தான் தெரிகிறது - மக்கள் எத்தனை மென்மையானவர்கள் என்று. CRP க்கு இல்லை; லோக்கல் போலீஸுக் குக் கூடப் பெரிதாக ஒன்றும் வேலை இருக் காது என்றுதான் தோன்றுகிறது. அசம்பாவி தங்கள் ஏதும் நடப்பதற்கான சாத்தியங்கள் ஒரு சதவீதம் கூட இல்லை. நாங்கள் நிம்மதி யாகச் சாப்பிட்டுவிட்டு, டீக்கடை பெஞ்சு களில் காலத்தைப் போக்குகிறோம்'' என்கி றார் CRP ஐச் சேர்ந்த ஜாவேத் அகமத்.

''ஒரு வகைல இவங்க வந்தது நல்ல துக்குத்தான் சார். எங்க லட்டிக்கு பயப்படா தவங்கல்லாம் இவங்க துப்பாக்கிக்கு பயப் படறாங்க. இந்தாளுங்களைப் பார்த்தாலே ஒதுங்கிப் போறான். மாட்டினா, 'இந்தில பேசியே உயிரை வாங்கிடுவாங்களோ'ங் கற பயம் ஒரு காரணமா இருக்கலாம்'' என்று ஜோக் அடித்தார் ஒரு லோக்கல் சப்-இன்ஸ்பெக்டர்.

- பியார்

படங்கள் : கோபிநாத்




நான் சந்திச்சது சரி... அந்தாளு எதுக்குப் போய் பேசினாரு?...
எப்படியோ போங்க... ரானிப் பேட்டையில விட்டுக் கொடுத்தா சரி!...


அட, நெருப்பே கக்கலியே!... சமர்த்தா ஆயிட்டே... இனிமே நாம ஃப்ரெண்ட்ஸ்!
இந்தியா
அருணாசல்
சீனா




ஐயோ, புலி, புலி... வளர்த்தவைப் புலி...
எங்கே இருக்கு புலி? எல்லாம் உங்க கற்பனையில தான் இருக்கு!...




# கல்கி





1993
செப்டம்பர் 19
மலர் : 52
இதழ் : 8
ஸ்ரீமுக
புரட்டாசி 3


# போகாத ஊருக்கு வழி!

மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி, அரசு அமைத்திருப்போரின் நிலை மிகவும் பரிதாபமாக இருக்கிறது. அஜித்சிங் கட்சியிலிருந்து ஏழு பேரை இழுத்துக் கொண்டு தம்மை ஒருவாறு ராவ் நிலைப்படுத்திக் கொண்டார். நம்பிக்கை இல்லாத் தீர்மானத்திலிருந்து தப்பினார். ஆனபோதிலும் உட்கட்சிப் பூசல் நீடிக்கிறது. ராவைப் பதவி இறக்கி விடப் பிரதமர் நாற்காலி மீது குறி வைத்துள்ள சிலர் வெறித்தனமாக அலைகிறார்கள்.

கர்நாடகத்தில் மொய்லியைக் கவிழ்த்து விட்டு வேறு ஒருவரை முதல்வராக்கவும் அதன் மூலம் அமைச்சரவையில் இடம்பெறவும் பலர் வெளிப்படையாகவே முயற்சி செய்கிறார்கள்.

ஆந்திராவில் விஜயபாஸ்கர ரெட்டி அனைத்து அமைச்சர்களிடமும் ராஜினாமாக் கடிதங்களைப் பெற்று அமைச்சரவையைத் திருத்தி(?) அமைத்திருக்கிறாராம் - 42 அமைச்சர்கள்!

இவை எல்லாவற்றுக்கும் பொறாமை - பொச்சரிப்பு, சுயநலம், பேராசை இவையே காரணம். பணத்தாசை. 'பணம் பாதாளம் வரை பாய்கிறது' என்பார்கள். இங்கே ஜனநாயகத்தைப் பணத்தாசையும் பதவி ஆசையும் குழிவெட்டிப் புதைத்துக் கொண்டிருக்கின்றன.

எவ்வளவோ கட்டுப்பாடான கட்சி என்று நாம் எண்ணிக் கொண்டிருக்கும் தி.மு.க.வில் கூட இன்று சலசலப்பு சப்தம் பலமாகவே கேட்கிறது.

தமிழக காங்கிரஸுக்குள் 'ஜெ'யை எதிர்ப்பதில் ஒற்றுமை ஏற்பட்டிருந்தாலும் அதுவும் இன்றைய சந்தர்ப்பத்துக்கு ஏற்ற தாற்காலிக ஒட்டு வேலை தான் என்றே தோன்றுகிறது.

அ.தி.மு.க. நிலையாக நிற்பதாகத் தோன்றினாலும் அக் கட்சியின் எம்.பிக்கள் இழுக்கப்படாமலிருக்க இங்கிருந்து போலீஸ் டில்லி போய் பாதுகாப்புத் தர நேர்ந்தது என்பதைப் பார்க்க நம்பிக்கை தளர்கிறது. சு. சுவாமி கூற்றுப்படி எத்தனை எம்.பிக்கள் - எம்.எல்.ஏக்கள் எப்போது முதல்வரைக் கை விடுவார்களோ என்ற அச்சம் சதா நிலவுகிறது.

இம்மாதிரியெல்லாம் தாங்கள் நடந்து கொள்வது, தங்களைத் தேர்ந்தெடுத்த மக்களுக்குத் தாங்கள் செய்யும் துரோகம், ஜனநாயக துரோகம், தேசத் துரோகம் என்று எந்த எம்.பியும் எம்.எல்.ஏயும் எண்ணிப் பார்ப்பதாகத் தெரியவில்லை. ஏன் இப்படி?

ஜனநாயகம் என்பது சட்டத்தின் ஆட்சி மட்டுமல்ல. நல்ல ஆரோக்கியமான மரபுகளை உள்ளடக்கியது. சீரிய மரபுகளைக் கடைப்பிடிக்காத ஜனநாயகம் சீரழியவே செய்யும். இன்றுள்ள பல எம்.எல்.ஏக்கள் எம்.பிக்களுக்குச் சட்டமும் புரியாது; மரபுகளும் தெரியாது.

இரு கட்சி ஆட்சிதான் சிறந்த ஜனநாயகமாக அமைய முடியும். அதற்கேற்ப பல்வேறு கட்சிகள் கருத்தொற்றுமை அடிப்படையில் இணைந்தாக வேண்டும். ஒரு கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு அதனைக் கவிழ்ப்பதே காரியமாக இராமல் ஆள அனுமதிக்க வேண்டும். தவறுகளைத் திருத்தியும் யோசனைகளைக் கூறியும் ஆக்கபூர்வமான எதிர்ப்புப் பணி ஆற்ற வேண்டும். மறுபுறமாக எதிர்க்கட்சியை ஆளும் கட்சி மதித்து நடக்க வேண்டும்.

உட்கட்சி ஜனநாயகமும் அவசியம். கட்சிப் பதவிகளுக்குச் சரியானபடி தேர்தல்கள் நடந்து விட்ட பிறகு பதவி ஏற்பவருக்கு மற்றவர்கள் ஒத்துழைப்பு தர வேண்டும். தவறுகளைச் சுட்டிக்காட்டலாம். ஆனால் கவிழ்ப்பதே காரியமாக அலையக் கூடாது.

ஒழுங்கான ஜனநாயகம் அமைந்து, நாடு உயர என்ன வழி? வயது வந்த அனைவருக்கும் வோட்டுரிமை வழங்கினாலும் தேர்தலுக்கு நிற்க விரும்புவோருக்காவது சில அடிப்படைத் தகுதிகளை நிர்ணயித்துச் சட்டம் இயற்றலாம். சட்டமன்ற நாடாளுமன்ற உறுப்பினராக விரும்பும் கண்ணியம் மிக்கோருக்கு, ஐ.ஏ.எஸ். அதிகாரிகளுக்கு அளிப்பது போலப் பயிற்சி அளிக்கவும் செய்யலாம். Political Science-ல் தேர்ச்சி அடைவதை நிர்ப்பந்தமாக்கலாம். அப்போதும் பணத்தின் திருவிளையாடலை முழுமையாக ஒழிக்க முடியாது என்றாலும் கணிசமாகக் குறைக்க வாய்ப்புண்டு.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# மீண்டும் பிரமாண்டமான முன்வெளியீட்டுத் திட்டம்

1. ஆலமர் செல்வன் புகழ்பாடும் திருவாசகம்.
2. ஆலமர் செல்வனின் செல்வன் புகழ்பாடும் கந்தபுராணம்.

கச்சியப்பர் அருளிய

## கந்தபுராணம் 10 தொகுதிகள்

(ஒரு பக்கம் மூலம் -எதிர்ப் பக்கம் உரை)
புலவர். பேராசிரியர் அ. மாணிக்கனார் M.A. விலை ரூ. 600.00

மாணிக்க வாசகர் அருளிய

## திருவாசகம்

(ஒரு பக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை)
புலவர். எம். நாராயண வேலுப் பிள்ளை விலை ரூ. 70.00

மொத்த விலை ரூ. 670.00

மூன்று விதமான சலுகை 50%; 40%; 30% உண்டு.

*சலுகை 1:* அக்டோபர் 5க்குள் அனுப்பினால்
50% கழிவு போக ரூ. 335.00
*சலுகை 2:* அக்டோபர் 6லிருந்து நவம்பர் 5வரை அனுப்பினால்
40% கழிவு போக ரூ. 402.00
*சலுகை 3:* நவம்பர் 6லிருந்து நவம்பர் 15வரை அனுப்பினால்
30% கழிவு போக ரூ. 469.00

புத்தகங்கள் அனைத்தையும் டிசம்பர் முதல் வாரத்திலிருந்து அனுப்புவோம். தபால் செலவை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக.

### கந்தபுராணம் - ஒரு சிந்தனை!

தமிழ் இலக்கிய வரலாற்றிலேயே மிகப் பெரிய நூல்கள் இரண்டு! ஒன்று கம்பராமாயணம்; இரண்டு கந்தபுராணம். 'கம்பன் என்றொரு மானுடன் வாழ்ந்ததும்' எனப் பாரதியாரே வியக்கும் வண்ணம் ஓராயிரம் புகழ் படைத்தவர், கம்பர்! காப்பிய உலகில் கம்பராமாயணம் ஓர் இமயம்! இதனை யாரும் மறுக்க முடியாது! ஆனாலும் கம்பர் செய்யாத அற்புதத்தைக் கச்சியப்பர் தமது கந்தபுராணத்தில் செய்து காட்டுகிறார். விரிவு அஞ்சி ஓரிடத்தை மட்டும் சுட்டிக் காட்டுகிறோம்.

இராவணன் முதலான அரக்கரின் பிறப்பு, வளர்ப்பு, தவநிலை பற்றிய விரிவான விளக்கம் கம்பராமாயணத்தில் இல்லை! ஆனால் கச்சியப்பர் சூரபன்மன் முதலான அசுரரின் பிறப்பு, வளர்ப்பு, தவநிலை பற்றிய

விளக்கங்களை மிக விரிவான முறையில் கந்தபுராணத்தில் கூறியுள்ளார்; இதற்கென ஒரு காண்டமே அமைத்துள்ளார். அந்தக் காண்டம் அசுரகாண்டம்! கந்தபுராணத்தின் இரண்டாம் காண்டமான இது, அசுரரின் அட்டகாசமான செயல்களைக் கூறுகிறது. கச்சியப்பரின் அசுரகாண்டம்போல், கம்பனில் அரக்க காண்டம் என்றொரு காண்டம் இருக்க வேண்டுமல்லவா? இருந்திருந்தால் - இராவணன் வரம் பெற்ற படலம், வரை எடுத்த படலம், திக்கு விசய படலம் எனப் படலம் படலமாக அது விரிந்திருக்கும் அல்லவா? கம்பனின் பெருமை இன்னும் கூடியிருக்குமல்லவா? அந்தப் பெருமையைக் கச்சியப்பர் தட்டிச் சென்றுவிட்டார்!

மற்ற இடங்களிலெல்லாம் கம்பராமாயணத்தை நினைவுபடுத்தும் வண்ணம் அமைந்துள்ளது, கந்தபுராணம். அங்கே இராமன் - இங்கே முருகன்; அங்கே இராவணன் - இங்கே சூரபன்மன்; அங்கே அனுமன் - இங்கே வீரவாகு; அங்கே கும்பகருணன் - இங்கே பானுகோபன்; அங்கே இந்திரஜித்து - இங்கே சிங்கமுகன்; அங்கே சீதை - இங்கே வள்ளி. காண்டமும் ஆறுதான்; பாடல்களும் ஏறக்குறைய அவ்வளவே!

## திருவாசகம் - ஒரு சிந்தனை!

இதன் ஆசிரியர் மாணிக்கவாசகர், சைவ சமய குரவர் நால்வரில் நான்காம் இடத்தைப் பெறுகிறார். அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் என நான்காம் நிலையில் மாணிக்கக வாசகர் வைத்துப் பேசப்படுவது தகுதி அடிப்படையில் அன்று! இவர்கள் தோன்றிய காலத்தின் வரிசைப்படி இந்த ஸ்வைப்பு முறை அமைந்திருக்கலாம்! காலத்தால் பிற்பட்ட காரணத்தினால்தான் மாணிக்க வாசகர், பெரிய புராணத்தில் இடம் பெறவில்லை போலும்! முற்பட்டவராயின் தம் நூலில் இவரையும் சேக்கிழார் சேர்த்திருப்பார் என்பது திண்ணம். எது எப்படியாயினும் திருவாசகத்தின் பெருமை அளப்பரிது! ஒரு குழந்தை தாய் வயிற்றில் கருவாகி உருவாகி வளரும் காலத்தில் மாதந்தோறும் எத்தகைய நோயால் தாக்கப்படுகிறது என்பதையும், அந்தந்தக் காலத்து நோய்க்கு அமையும் பெயர் முதலியவற்றையும், மாற்று முறை பற்றியும் படிக்கும்போது சீவக சிந்தாமணி (முத்தியிலம்பகம்) நினைவுக்கு வராமல் போகாது! திருவாசகத்தில் காணும் திரு அண்டப் பகுதி, இந்தக் காலத்து விஞ்ஞானிகளையும் திகைக்க வைக்கும் பகுதியாகும். தெரியாமலா சொன்னார்கள், 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்று!

இவ்விரண்டு நூல்களுக்கும் சேர்த்துப் பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

**VARTHAMANAN PATHIPPAGAM**
A.R.R. COMPLEX, 141, USMAN ROAD,
T.NAGAR, MADRAS -17.
(Near Panagal Park)
Phone No. 825 7995.

உங்கள் செல்வம் :

# இன்றைய முதலீடு, நாளைய மகிழ்ச்சி!

**இன்று வாங்கும் ஷேர், நாளை விலை ஏறினால் 'ஹ ஹ ஹா'தானே! பின்வரும் பங்குகளில் முதலீடு செய்வது சிறிது காலத்துக்குள் உங்கள் சந்தோஷத்தை அதிகரிக்கச் செய்யலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.**

## Chendur Forge Exports Ltd

ஃபோர்ஜிங் என்பது உலோகத்தைப் (குறிப்பாக எஃகு) பழுக்கக் காய்ச்சி, சுத்தியலால் தட்டிக் கொட்டி, தேவையான வடிவங்களை உருவாக்குதல். இன்று நவீன முறையில் இதைச் செய்யப் பல இயந்திரங்கள் உள்ளன. செந்தூர் ஃபோர்ஜ், முக்கியமாக மோட்டார் கார் பாகங்களை உருவாக்குகிறது. லார்ஸன் அண்ட் டூப்ரோ, பிரேக்ஸ் இந்தியா, டி.வி.எஸ்., ரானே, ஸிம்ப்ஸன், பி.எச்.இ.எல். போன்ற பல்வேறு தொழிலகங்களுக்கும் இதன் தயாரிப்புகள் விநியோகமாகின்றன. நிறுவனத்தைத் தொடங்கி நிர்வகித்து வரும் என். பாலசுப்பிரமணியத்துக்கு இத்துறையில் நிறைய அனுபவம் உண்டு.

தற்போது ஏற்றுமதிக்கென்றே உலோக பாகங்களை உருவாக்க ஒரு தொழிலகத்தை இந்த நிறுவனம் கும்மிடிப்பூண்டியில் அமைக்கிறது. 388 லட்சம் முதலீடு தேவை. அரசு மான்யம், வங்கிக் கடன்கள் போக 185 லட்சம் பொதுமக்களிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. பத்து ரூபாய் பங்குகள் அதே விலைக்குத் தரப்படுகின்றன. நிறுவனத்தின் தயாரிப்புகளுக்கு நல்ல ஏற்றுமதி வாய்ப்பு உண்டு. நாளடைவில் ஷேர்களின் மதிப்பு உயர்வது சாத்தியமே. விண்ணப்பங்களைப் பெறுவது செப்டம்பர் 15 இல் ஆரம்பமாகியுள்ளது. உடனடியாகச் செயல்பட வேண்டும்.

## Apollo Tubes Ltd

அப்போலோ குரூப்பும் அதன் தலைவர் ராஜுக் கிங்கும் ரொம்பப் பிரசித்தம். டில்லி நிறுவனமாகிய இது, எஃகுக் குழாய்கள் தயாரிப்பில் ஈடுபட்டுள்ளது. இதற்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் தேவையும் நல்ல விற்பனை மார்க்கெட்டும் உள்ளது. விரிவாக்கம் கருதியும் தொழிலகத்தை நவீனப்படுத்தவும் பொது மக்களுக்குப் பங்குகளை விநியோகித்து மூலதனம் கோருகின்றனர். ஒவ்வொன்றும் பத்து ரூபாய் மதிப்புள்ள 30 லட்சம் பங்குகள் ரூ 5 கூடுதல் விலைக்கு அதாவது ரூ 15க்கு விநியோகமாகவுள்ளன. இன்று இந்த நிறுவனத்தின் பங்குகள் மார்க்கெட்டில் ரூ 30க்கு விலை போகின்றன என்பதைப் பார்க்க இது நல்ல முதலீடே.

## Salzer Textiles Ltd

தொழில் நுணுக்கமறிந்த ஆர். துரைசாமி இந்த நிறுவனத்தைக் கோவையில் தொடங்குகிறார். ஏற்கெனவே ஸால்ஸர் எலக்ட்ரானிக்ஸ், ஸால்ஸர் கண்ட்ரோல்ஸ் என்ற நிறுவனங்களைத் தோற்றுவித்து வெற்றிகரமாக நடத்தி வருகிறார் துரைசாமி. புதிய நிறுவனம் எம்ப்ராய்டரி வேலைப்பாடுகளுடன் பலரக ஆடைகளைப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் உற்பத்தி செய்யும். கம்ப்யூட்டர் வடிவமைத்துத் தரும் டிசைன்களில் இயந்திரங்கள் எம்ப்ராய்டரி செய்யும். ஸ்விஸ் நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் ஆரம்பமாகும் இந் நிறுவனத்தின் தயாரிப்புகளுக்கு உள்நாட்டு வெளிநாட்டுச் சந்தைகளில் நல்ல வரவேற்பு எதிர்பார்க்கப்படுகிறது. எனவே பங்குகளின் மதிப்பு சில காலத்தில் உயரும். திரட்டப்படும் ரூ. 17 கோடி மூலதனத்தில், 4.66 கோடி பொது மக்களுக்குப் பங்குகளாக விநியோகமாகிறது. கூடுதல் விலை ஏதும் இன்றி ஒவ்வொரு பங்கும் ரூ. பத்துக்கே வழங்கப்படுகிறது.

## Vijaya Shrimp Farms & Exports

கடலில் நடக்கும் அறுவடைக்கு எப்போதுமே நல்ல ஏற்றுமதி மார்க்கெட் உண்டு. அதிலும் இறாலுக்கு உலகெங்கும் கிராக்கி. கறுப்பு புலி இறாலுக்கு மிக அதிகமான விலை. இதைத் தயாரிப்பதே நிறுவனத்தின் நோக்கம். பண்ணை நெல்லூர் மாவட்டத்தில் அமைகிறது. சுமார் ரூ. ஆறு கோடி மூலதனம் தேவை. இதில் பொது மக்களுக்கு மூன்று கோடி வழங்கப்படுகிறது. ஒவ்வொன்றும் ரூ 10 பெறுமானமுள்ள 30 லட்சம் பங்குகள். பிரீமியம் கிடையாது. இதில் முதலீடு செய்வது நற்பலனளிக்கும்.

– வி. கோபாலன்

# உங்கள் அன்பை வெகுமதியாக இன்று வழங்குங்கள்.
# அது அவளுடைய மகிழ்ச்சியாக நாளை திகழும்.



உங்கள் அன்பார்ந்த சின்னஞ்சிறு செல்விக்கு. உங்கள் பெருமிதம் மற்றும் மகிழ்ச்சிக்கு காரணமாக விளங்குபவளுக்கு. சாந்தம், அக்கறை மற்றும் அன்பை பொழிபவளுக்கு. அவளுடைய புன்முறுவல் உங்கள் உள்ளத்தில் என்றென்றும் வாஞ்சையுடன் நிலவ.

அவள் வருங்காலத்தைப் பற்றி எண்ணுங்கள். அவள் நாளைய கனவுகளைப் பற்றி. அவளுடைய வருங்காலத்தைப் பாதுகாப்பாக திடமச் செய்யுங்கள். யூடிஐ-ன் ராஜ் லக்ஷ்மியை அவளுடைய அடுத்த பிறந்த தினத்தன்று வெகுமதியாக வழங்குங்கள். 5 வயது வரையில் அவளுடைய அனைத்து பிறந்த தினங்களை இவ்வாறு கொண்டாடலாம். பொங்கல், தீபாவளி போன்ற மகிழ்ச்சியான தினங்களிலும் இதை நீங்கள் வெகுமதியாக வழங்கலாம். உண்மையில், எந்த ஒரு மகிழ்ச்சியான தினங்களிலும்.

**விண்ணப்ப பாரங்களுக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் காரியாலயம், முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டுகளையோ அணுகவும்.**

**ராஜ் லக்ஷ்மி**
அவளுடைய வளமான எதிர்காலத்திற்காக

**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

5 வயது வரையிலுள்ள பெண் குழந்தைக்கான தனிச்சிறப்பான திட்டமே ராஜ் லக்ஷ்மி. இத்திட்டத்தின் கீழ் அவளுடைய முதலீடு 20 வருடங்களில் 21 மடங்கு விருத்தி அடைகிறது.

**சிறப்பம்சங்கள்:** ☐ எப்பொழுது தேவையோ அப்போது இத்திட்டத்தில் சேரலாம் ☐ குறைந்தபட்ச முதலீடு ரூ.1000. உச்ச வரம்பு கிடையாது ☐ தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்பொரேட் பாடி அல்லது கம்பெனி, 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம் ☐ குழந்தை பிறந்த சமயத்தில் செய்யப்பட்ட ரூ.1000 முதலீடு 20 வருடங்களில் 21 மடங்கு விருத்தி அடைகிறது. விருத்தியடையும் தொகை ஆரம்ப வயதைச் சார்ந்ததாகும் ☐ விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும் ☐ ஒவ்வொரு காலவரையில் அறிவிக்கப்பட்ட போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

அனைத்து செக்யூரிட்டி முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டதாகும். முதலீடு செய்யும் முன் உங்கள் முதலீடு ஆலோசகரை கலந்தாலோசிக்கவும்.

மண்டல அலுவலகம்: 25, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
கிளை அலுவலகங்கள்: ● கோயம்புத்தூர். போன்: 210399 ● சென்னை. போன்: 517101, 517190 ● மதுரை. போன்: 38188 ● திருச்சி. போன்: 33818.

UTI.69.93 TM C

# தியாக பூமி

## 5. தந்தையும் மகளும்

**ச**ம்பு சாஸ்திரி அவ்வாறு உள்ளே பிரவேசித்ததும், சாவித்திரி, மங்களம் இரண்டு பேருமே ஒரு கணம் திகைத்து நின்றுவிட்டார்கள்.

திகைப்பு நீங்கியதும் சாவித்திரி, "அப்பா!" என்று அலறிக்கொண்டு ஓடிப்போய்ச் சம்பு சாஸ்திரியைக் கட்டிக் கொண்டாள்.

சாஸ்திரி, "மங்களம்!" என்று சொல்லி அவளை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தார்.

மங்களம் ஒன்றும் பதில் பேசாமல் திரும்பி விடுவி டென்று சமையலறைக்குள் சென்றாள்.

சாஸ்திரி சாவித்திரியைத் தழுவியபடியே அழைத்துக் கொண்டு உள்ளே வந்து தாழ் வாரத்தில் போட்டிருந்த விசுப் பலகையில் உட்கார்ந்தார். சாவித்திரியையும் தம் அருகில் உட்கார வைத்தார். குழந்தை அவருடைய மடியில் முகத்தை வைத்துப் படுத்தபடி விசிக்கத் தொடங்கினாள்.

சமையலுள்ளில் சற்று உரத்த குரலில் சம்பு சாஸ்திரி யின் காதில் விழும்படியாகப் பின்வரும் சம்பாஷணை நடந் தது :

"அடி பெண்ணே! நான் அப்பவே சொன்னேனோ, இல்லையோ! நீ விளையாட் டுக்காக ஒரு காரியத்தைச் செய்யப் போக, அவர் நிஜந் தான்னு நினைச்கண்டாலும் நினைக்கக்குவார். வேண் டாம்னு சொன்னாக் கேட்டாத் தானே?"

'நினைச்கண்டா நினைச் சுக்கட்டுமே! கல்யாணம் ஆகப் போற பொண்ணைக் கரண்டி யைக் காச்சிச் சூடறதுக்கு இங்கே யாருக்காவது பைத் தியம் பிடிச்சிருக்கா, என்ன?"

"இல்லேடி, கரைக்கறவர் கரைச்சாக் கல்லுங் கரையும் என்கிறாப்பலே, இந்தப் பொண்ணு இல்லாத்தையும் பொல்லாத்தையும் ஏத் தெவே சொல்லி வைச்கண்டிருக்காளே!"

"வேணும்னா இனிமே அவர் வெளியிலே போற போது, பொண்ணையும் கூட அழைச்கண்டு போகட்டும். அவ ஹிம்சையை இத்தனை நாளும் பொறுத்துப் பொறுத் துப் பார்த்தாச்சு; இனிமேல் என்னால் பொறுக்க முடி யாது."

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சம்பு சாஸ்திரி, சாந்தமான குரலில், "குழந்தை! சித்திக்குக் கோப மூட்டறதுக்கு நீ என்ன பண்ணினே அம்மா!" என்று கேட்டார்.

"சாவித்திரி விசித்துக் கொண்டே, "நான் ஒண்ணும் பண்ணலை, அப்பா! பூஜைக்குப் பூத்தொடுத்திண்டிருந் தேன். சித்தி, கிணத்துலேயிருந்து ஜலங் கொண்டு வரு வதற்குக் கூப்பிட்டாள். காலமேயிருந்து, இருபது குடம் கொண்டு வந்து கொட்டிவிட்டேன், அப்பா! 'இதோ பூவைத் தொடுத்து வைச்கட்டு வர்றேன்னு சொன்னேன். அதுக்காகக் கரண்டியைப் பழுக்கப் பழுக்கக் காய்ச்சி எடுத்துண்டு சூடறதற்கு வந்தா, அப்பா!" என்று சொல்லி, பலமாக அழத் தொடங்கினாள்.

சம்பு சாஸ்திரிக்கு அப்போது பழைய சம்பவம் ஒன்று ஞாபகத்திற்கு வந்தது. பத்து வருஷத்துக்கு முன்னால் நடந்ததென்றாலும் நேற்றுத்தான் நடந்தது போல் அச்சம் பவம் அவர் மனக்கண் முன்னால் தோன்றியது.

**சா**ஸ்திரி மாட்டுக் கொட்டகையில் இருந்தார். புதுச் சத்திரம் சந்தையிலிருந்து புதிதாக வாங்கிக் கொண்டு வந் திருந்த உயர்ந்த ஜாதி 'உகலாயத்து' மாடுகளைப் பார்வை யிட்டுக் கொண்டிருந்தார். "ரூபாய் இருநூத்தைம்பது கொடுத்தாலும் பொறும், அப்பா!" என்று நல்லானைப் பார்த்துச் சொன்னார். அப்போது, தண்ணீரில் ஏதோ விழுந்ததுபோல் ஒரு சிறு சப்தம் எங்கிருந்தோ கேட்டது. சின்ன சப்தந்தான்; ஆனாலும் அது ஏன் அவருடைய இரு தயத்தை அவ்வாறு பேதித்தது? அதன் காரணம் அடுத்த விநாடியே தெரிய வந்தது. "ஐயோ! குழந்தை கிணத்துலே விழுந்துடுத்தே!" என்றது ஒரு தீனமான குரல். அது அவ ருடைய அத்தைக் கிழவியின் குரல்.

அத்தையின் குரலுக்கு எதிரொலியே போல் சம்பு சாஸ்திரியும், "ஐயோ!" என்றார். உடனே, விரைந்து ஓட வேண்டுமென்று அவர் மனம் துடித்தது! ஆனால், அந்தச் சமயத்தில் அவருடைய கால்கள் சொன்னபடி கேட்டால்

அமரர் கல்கி

தானே? இரண்டு அடி வைப்பதற்கு முன்னால் தடுமாறிக் கீழே விழுந்தார்.

அதிர்ஷ்டவசமாக, அச்சமயம் இன்னொரு மனிதனுக்குக் கால்கள் சொன்னபடி கேட்டன. தடுமாறி விழுந்த சம்பு சாஸ்திரியைத் திரும்பிக் கூடப் பாராமல் நல்லான் மின்னலைப் போல் பாய்ந்து சென்றான். மூன்று கொல்லைக் கட்டுகளையும், வேலிகள், செடிகள் உள்படத் தாவிக் கொண்டு சென்று, கண்ணை மூடித் திறக்கும் நேரத்தில் சாஸ்திரியாரின் வீட்டுக் கொல்லைக் கிணற்றை அடைந்தான். கிணற்றைச் சுற்றி ஏழெட்டுப் பேர் நின்று கொண்டு குய்யோ முறையோ என்று கத்திக் கொண்டிருந்தார்கள். ஒருவர் தாம்புக் கயிற்றை எடுத்துக் கீழே விட முயற்சித்தார். இன்னொருவர் ஏற்ற மரத்தை இழுத்து அமுக்க முயன்று கொண்டிருந்தார். நல்லான் அவர்களையெல்லாம் ஒரே தள்ளில் விலக்கித் தள்ளிவிட்டுக் கிணற்றுக்குள் பரபரவென்று இறங்கினான்.

சாஸ்திரிக்கு, வாழ்விலேயே விரக்தி ஏற்பட்டது. அவருடைய மனமெல்லாம் பகவத் பக்தியில் ஈடுபட்டது. இரண்டாவது கல்யாணத்தைப்பற்றி அவர் நினைக்கவேயில்லை. உலகில் பந்தம் அதிகமாக ஆக, துக்கமும் அதிகம் என்பதை உணர்ந்த சாஸ்திரி, இது விஷயத்தில் ஒரே பிடிவாதமாயிருந்தார்.

இதெல்லாம் சாஸ்திரிக்கு அப்போது தெரியாது. பிற்பாடு மற்றவர்கள் சொல்லித்தான் தெரிந்தது. விழுந்தவர் எழுந்திருந்து நெஞ்சு படக் படக் என்று அடித்துக் கொள்ள, கால் கைகள் நடுங்க, தடுமாற்றத்துடன் ஓடிச் சென்று கிணற்றங் கரையை அடைந்த சமயம், நல்லான் கிணற்றுக்குள்ளிருந்து குழந்தை சாவித்திரியைத் தோளில் போட்டுக் கொண்டு கரையேறிக் கொண்டிருந்தான். சாஸ்திரியைப் பார்த்ததும், "சாமி! பயப்படாதீங்க! குழந்தைக்கு அபாயம் இல்லீங்க" என்றான். அவ்வளவுதான்; சாஸ்திரியார் ஸ்மரணை இழந்து கீழே விழுந்தார்.

அன்று சாயங்காலம், சாஸ்திரியின் அத்தை அவரிடம் சொன்னாள் : "அப்பா! எத்தனையோ நாளாய் நானும் சொல்லிண்டு வந்தேன். நீ கேட்கவில்லை. எனக்கோ தள்ளாமை அதிகமாயிடுத்து; நாளுக்குநாள் கண் தெரியலை. இந்தக் குழந்தையைக் காப்பாத்தறதுக்கு இனிமேல் என்னை நம்பாதே. நான் சொல்றதைக் கேளு. கொஞ்சம் வயசான பொண்ணாப் பாத்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளு. உனக்கென்ன அப்படிப் பிரமாதமாய் வயசாயிடுத்து? ஐம்பது வயசானவாள் எல்லாம் கல்யாணம் பண்ணிக்கலையா? உனக்காக இல்லாமற் போனாலும், இந்தத் தாயில்லாப் பெண்ணைக் காப்பாத்தறத்துக்காவது கல்யாணம் பண்ணிக் கொள்."

இந்த மாதிரி இதற்கு முன்னாலும் அத்தை எத்தனையோ தடவை சொல்லியிருக்கிறாள். அப்போதெல்லாம் சாஸ்திரி அதைக் காதில் போட்டுக் கொள்ளாமலே போய்விடுவார். அல்லது, "அத்தை! வேறே ஏதாவது பேச்சு இருந்தால் பேசேன்" என்பார். ஆனால் இன்று எழுந்து போகவும் இல்லை; மறுத்துப் பேசவும் இல்லை. மௌனமாயிருந்தார்.

சாஸ்திரியின் முதல் மனைவி பாக்கியம், சாவித்திரி கைக் குழந்தையாயிருக்கும் போதே வைசூரி போட்டு இறந்து போனாள். சாஸ்திரியின் வாழ்க்கையில் அவருடைய தங்கை சம்பந்தமான ஒரு துக்க சம்பவம் ஏற்கெனவே நிகழ்ந்திருந்தது. அவருடைய உயிருக்குயிராயிருந்த மனைவியும் இறந்துவிடவே, சாஸ்திரிக்கு வாழ்விலேயே விரக்தி ஏற்பட்டது. அவருடைய மனமெல்லாம் பகவத் பக்தியில் ஈடுபட்டது. இரண்டாவது கல்யாணத்தைப்பற்றி அவர் நினைக்கவேயில்லை. உலகில் பந்தம் அதிகமாக ஆக, துக்கமும் அதிகம் என்பதை உணர்ந்த சாஸ்திரி இது விஷயத்தில் ஒரே பிடிவாதமாயிருந்தார். எவ்வளவோ பேர் எத்தனையோ விதமாகச் சொல்லியும் அவர் செவி கொடுக்கவில்லை. ஆனால், இன்று நடந்த சம்பவத்திற்குப் பிறகு அவருடைய மனம் மாறிவிட்டது. தாயில்லாக் குழந்தையான சாவித்திரியைப் பார்த்துக் கொள்ள ஒரு தாய் அவசியந்தான் என்று அவருக்குப் பட்டது. 'அத்தையின் வாக்கு ஒரு வேளை அம்பிகையின் வாக்காயிருக்கலாம்' என்று தோன்றிற்று. அந்த வருஷத்திலேயே அவர் மங்களத்தை இரண்டாந் தாரமாக மணந்துகொண்டார்.

மேற்சொன்னது அவ்வளவும் சம்பு சாஸ்திரிக்கு இப்போது தெளிவாக ஞாபகத்தில் வந்தது. தாம் இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டதன் நோக்கம் என்ன என்பதையும், அந்த நோக்கம் எவ்வளவு அழகாக நிறைவேறியிருக்கிறது என்பதையும் எண்ணிப் பார்த்தபோது அவரை அறியாமல் சிரிப்பு வந்தது. அந்தச் சிரிப்பும் அதில் கலந்திருந்த துக்கமும், விரித்துக் கொண்டிருந்த

சாவித்திரியைத் திடுக்கிடச் செய்தன. சாவித்திரி விசித் தலை நிறுத்தி, நீர் ததும்பிய கண்களுடன் தகப்பனாரின் முகத்தை நோக்கினாள். அதைப் பார்த்த சாஸ்திரி, அவ ளுடைய முதுகைத் தடவிக் கொண்டே, "குழந்தை! நீ வருத்தப்படாதே, அம்மா! உன் கஷ்டங்களுக்கு முடிவு வந்துவிட்டது. கல்யாணம் நிச்சயம் பண்ணிண்டு வந் திருக்கேன். மாப்பிள்ளைக்கு ஸ்ரீதரன் என்று பெயர். பி.ஏ. பாஸ் பண்ணியிருக்கான். கல்யாணம் ஆனதும் சீக்கிரத்தி லேயே உன்னை அழைச்சுண்டு போய் விடுவார்கள், அம்மா!" என்று கூறியபோது, அவருடைய கண்களிலும் ஜலம் ததும்பத் தொடங்கியது.

ஆனால், சாவித்திரியின் கண்களிலிருந்த கண்ணீர் என்ன ஆயிற்று? திடீரென்று எப்படி மாயமாய் மறைந்தது? அவளுடைய முகம் ஒரு கண நேரத்தில் இப்படி மலர்ந்து விட்டதே! என்ன அதிசயம்!

"அது இருக்கட்டும், அப்பா! எத்தனை நாழியாச்சு, நீங்க இன்னும் பட்டினியா யிருக்கேளே! கருக்க ஸ்நானம்





"சார், சார்... என் கண்ணுல மிள காய்ப் பொடியைத் தூவிட்டு என் சம்பளப் பணத்தை எடுத்துட்டு ஓடறா சார்...!"

"யாருய்யா அது?"

"எம் பொஞ்சாதி சார்!"

- சிரிப்பு சாமியார்.

பண்ணிவிட்டு வாங்கோ! நான் அதுக்குள்ளே பூஜைக்கு எல்லாம் எடுத்து வைக்கிறேன்" என்றாள்.

## 6. ஸ்ரீதரன், பி.ஏ.

சாவித்திரி, அப்பாவினுடைய பூஜைக்கு வேண்டிய பொருள்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தபோது, அவளுடைய மனம் ஸ்ரீதரன் என்னும் உருவம் தெரியாத தெய்வத்தைப் பூஜை செய்ய ஆரம்பித்துவிட்டது.

ஸ்ரீதரன்! எவ்வளவு அழகான பெயர்! அவர் எப்படி இருப்பாரோ? பி.ஏ. பாஸ் பண்ணியவர் என்றல்லவா அப்பா சொன்னார்? சென்ற வருஷத்தில் நெடுங்கரைக்கு வந்திருந்த பி.ஏ. கணபதி என்பவரின் ஞாபகம் சாவித்திரிக்கு வந்தது. அந்தக் கணபதி அவருடைய பெயருக்கு விரோதமாக உயரமாய் ஒல்லியாய் இருந்தார். தலையில் உச்சிக் குடுமி வைத்திருந்தார். கிராமாந்தரத்தில் அந்தக் காலத்தில் வாலிபர்கள் தலை நிறையக் குடுமி வைத்திருப்பதுதான் சாதாரண வழக்கம். பட்டணங்களுக்குப் படிக்கப் போனவர்கள் அந்த வழக்கத்துக்கு விரோதம் செய்தார்கள். சிலர் கிராப் செய்து கொண்டார்கள்; வேறு சிலர் அதற்கு நேர் மாறாக உச்சிக் குடுமி வைத்துக் கொள்ளத் தொடங்கினார்கள். பெரும்பாலும் கலாசாலைப் படிப்பை முடித்தவர்கள்தான் இம்மாதிரி செய்தார்கள். இதனால் அந்தக் காலத்தில் உச்சிக் குடுமிக்கு, 'பி.ஏ. குடுமி' என்று பெயர் ஏற்பட்டிருந்தது. மேற்படி கணபதியின் உச்சிக் குடுமியை, 'பி.ஏ. குடுமி' என்று ஊரில் எல்லாரும் சொன்னார்கள்.

ஆகவே, ஸ்ரீதரன் தலையிலும் உச்சிக் குடுமிதான் இருக்கும் என்று சாவித்திரி நினைத்தாள். மேற்படி கணபதியின் உச்சிக் குடுமி பார்ப்பதற்கு நன்றாயில்லையென்று மற்றக் குட்டிகளுடன் சேர்ந்து தானும் பரிகாசம் பண்ணியதை நினைத்தபோது சாவித்திரிக்குத் தன் பேரிலேயே கோபம் வந்தது!

சீச்சீ! குடுமிதான் பெரிய காரியமாக்கும்! குடுமி எப்படியிருந்தால் என்ன? அவர் முகம் எப்படியிருக்குமோ? ஒருவேளை மூக்குக்கண்ணாடி போட்டுக் கொண்டிருப்பாரோ? போட்டுக் கொண்டிருந்தால், பார்ப்பதற்கு அழகாய்த்தான் இருக்கும். போட்டுக் கொண்டிராமற் போனால், இன்னும் ரொம்ப நல்லது. முகத்தின் லட்சணம் எங்கே போய் விடும்? - இந்த மாதிரி எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள் சாவித்திரி.

ஏறக்குறைய அதே சமயத்தில், என்.ஆர். ஸ்ரீதரன், பி.ஏ. சென்னை தம்பு செட்டித் தெருவில் இருந்த ஒரு ஹோட்டலில் மாடி அறையில் கயிற்றுக் கட்டிலில் படுத்தபடி, தனக்கு வரப்போகும் மனைவி எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிப் பகற்கனவு கண்டு கொண்டிருந்தான். அவன் மார்பின்மேல் சார்லஸ் கார்விஸ் நாவல் ஒன்று கிடந்தது.

ஆமாம்; அவன் கண்டது பகற்கனவுதான். ஏனெனில், அவன் கண்கள் மூடியிருந்தனவே தவிர, அவன் உண்மையில் தூங்கவில்லை. மனோராஜ்யந்தான் செய்து கொண்டிருந்தான்.

ஏறக்குறையச் சென்ற ஐந்தாறு மாத காலமாக - அதாவது அவன் நரசிங்கபுரத்திலிருந்து உத்தியோகம் தேடும் வியாஜத்துடன் சென்னைக்கு வந்ததிலிருந்து அவனுடைய நேரமெல்லாம் பெரும்பாலும் இத்தகைய மனோ ராஜ்யத்திலேயே சென்று

"அடப்பாவி! நாட்டுல இப்படியும் அநியாயம் பண்ணுவாங்களா?"

"என்னய்யா ஆச்சு?"

"கலர் டி.வி. சாயம் போய் கறுப்பு வெள்ளையா தெரிய ஆரம்பிச்சுருச்சய்யா!"

- சிரிப்பு சாமியார்.





"உன் அப்பாதான் உனக்கு பாக்கெட் செலவுக்கு மாதா மாதம் ரூ. 50/- கொடுக்கிறாரே, அது போதாதா?"

"அது எப்படி போதும்?" எனக்கு இரண்டு பாக்கெட்டு இருக்கே!"

- ரா. ராகவன்.

கொண்டிருந்தது.

இவ்வளவு நாள் யோசனைக்குப் பிறகும் அவன் ஒரு திட்டமான முடிவுக்கு வரவில்லையென்பது உண்மைதான். முக்கியமாக, தனக்கு வரப்போகும் மனைவியின் முகம் எப்படியிருக்க வேண்டுமென்று அவனால் பூரணமாகக் கற்பனை செய்ய முடியவில்லை. ரொம்ப அழகாயிருக்க வேண்டும்; ரொம்ப ரொம்ப அழகாயிருக்க வேண்டும்; தான் இது வரையில் பார்த்திருக்கும் அழகான முகங்கள் எல்லாவற்றையும் காட்டிலும் அழகாயிருக்க வேண்டும்! இப்படிப் பொதுவாக நினைக்கத்தான் முடிந்ததே தவிர, அது எப்படியிருக்க வேண்டுமென்று அவன் மனத்தில் பிடிபடவேயில்லை.

ஆனால், வேறு சில அம்சங்களில் தனக்கு வரப்போகும் மனைவி எப்படி இருக்க வேண்டுமென்பதைப்பற்றி அவனுக்குத் திடமான அபிப்பிராயம் ஏற்பட்டிருந்தது. அவள், படித்த நாகரிகமான பெண்ணாயிருக்க வேண்டும்; சந்தேகமில்லை. பதினெட்டு முழப்புடவையைப் பிரிமனை மாதிரி சுற்றிக் கொள்ளும் பட்டிக்காட்டுத் தரித்திரங்கள் முகத்திலும் அவனால் விழிக்க முடியாது. நடை, உடை, பாவனைகள் எல்லாம் ஜோராக இருக்க வேண்டும்.

கல்கத்தாவிலும் சென்னையிலும் தான் பார்த்திருக்கும் நாகரிகமான பெண்களை அவன் நினைத்துப் பார்த்துக் கொண்டான். அப்போது அவனுடைய சிநேகிதன் நாணாவினுடைய மனைவி ஸுலோசனாவின் ஞாபகம் வந்தது. அதிர்ஷ்டக்காரன் நாணா! ஸுலோசனாதான் என்ன நாகரிகம்! என்ன படிப்பு! அவள் ஆர்மோனியம் வாசித்துக் கொண்டு பாடினால், அப்ஸரஸ் பூமிக்கு வந்து பாடுவது போலல்லவா இருக்கிறது?

தான் நாணாவுக்கு ஒருநாளும் குறைந்து போகக்கூடாது என்று எண்ணமிட்டான் ஸ்ரீதரன். அதைக்காட்டிலும் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு செத்துப் போகலாம். ஸ்ரீதரன் நரசிங்கபுரத்திலிருந்து சென்னைக்கு வந்ததற்கே முக்கிய காரணம் இதுதான். அங்கே இருந்தால், யாராவது பட்டிக்காட்டுப் பேர்வழிகள் வரன், கிரன் என்று ஜாதகத்தையும் தேகத்தையும் எடுத்துக் கொண்டு வந்து சேர்வார்கள். அம்மாவும், அப்பாவும் மாற்றி மாற்றிப் பிராணனை வாங்கி விடுவார்கள்! அந்தத் தொந்தரவே வேண்டாமென்றுதான் அவன் சென்னைக்கு வந்திருந்தான்.

எல்லாம் சரிதான்; ஆனால் அவனுடைய எண்ணம் நிறைவேறுவது எப்படி? தாயார் தகப்பனார் பிரயத்தனம் செய்ய வேண்டாமென்றால், பிறகு கல்யாணம் நடப்பதுதான் எவ்வாறு? இந்தப் பாழாய்ப் போன தேசத்தில் மனதுக்குப் பிடித்த ஒரு பெண்ணைக் கண்டோம், காதலித்தோம், கல்யாணம் செய்து கொண்டோம் என்பதற்கெல்லாம் எங்கே இடம் இருக்கிறது?

ஐயோ, தான் ஐ.ஸி.எஸ். படிப்பதற்காகச் சீமைக்குப் போவதாகச் சொன்னதை அம்மா மட்டும் அப்படிப் பிடிவாதமாய்த் தடுத்திராவிட்டால்! "நீ சீமைக்குப் போனால் நான் உயிரை விட்டுவிடுவேன்!" என்றல்லவா சொல்லித் தடுத்துவிட்டாள், பாவி! ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையாயிருப்பதில் இதுதான் கஷ்டம்.

சீமைக்கு மட்டும் போயிருந்தால்!.... ஸ்ரீதரன் அந்த நிமிஷம் மனோராஜ்யத்தில் கப்பல் பிரயாணம் செய்யலானான். கப்பல் மேல்தளத்தில் அவன் குறுக்கும் நெடுக்குமாய் உலாவுகிறான். அப்போது எதிரில் நவநாகரிகத்திற் சிறந்த ஒரு பெண் வருகிறாள். அவள் யாரோ சுதேச ராஜாவின் மகளாகவோ, அல்லது பெரிய வடக்கத்திப் பிரபுவின் மகளாகவோ இருக்க வேண்டும். அவர்களுடைய கண்கள் சந்திக்கின்றன. பிறகு அவர்களுடைய கரங்கள் சந்திக்கின்றன. தங்களுடைய அழியாத காதலுக்கு அறிகுறியாக அவர்கள் தங்கள் கைவிரல்களில் உள்ள மோதிரங்களை மாற்றிக் கொள்ளுகிறார்கள்.

ஆகா! நாணாவும் அந்தக் கப்பலில் இருந்து இந்தக் காட்சியை மட்டும் பார்த்தானானால், என்ன செய்வான்? வயிறெரிந்து கடலில் குதித்துவிட மாட்டானா?....

ஸ்ரீதரனுடைய மனோராஜ்யம் இவ்வளவு ரஸமான கட்டத்துக்கு வந்திருந்த போது, அவனுடைய அறையின் கதவைத் தடதடவென்று தட்டும் சத்தம் கேட்டது. அதே சமயத்தில் நாணாவின் குரல், "ஏண்டா, இடியட்! உனக்குக் கல்யாணமாமேடா! எந்த மடையண்டா உனக்குப் பெண்ணைக் கொடுக்கப் போகிறான்?" என்று முழங்கிற்று.

(தொடரும்)

# மக்களாம்.

போட்டிக் கதை - 4

**எல். வி.**
(அறிமுக எழுத்தாளர்)

சுதந்திரம் கிடைத்து எத்தனையோ வருஷம் ஆகி விட்டது. இன்னமும் தாலுகா ஆபீஸ்களிலிருந்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் நிழல் விலகவில்லை. ஒரே மாதிரி கட்டப்பட்டிருந்த தாழ்வான ஓட்டுச்சார்பு போட்ட பழைய கட்டடங்களுக்கு நடுவில் ஓரிரண்டு புதிய கட்டடங்கள். சிமெண்ட்டிலும் காங்க்ரீட்டிலும் கட்டப்பட்டு, பெரிய பெரிய ஜன்னல்களுடன் வாய் பிளந்து படுத்திருக்கும் ராட்சஸன் போல. எப்போதும் திறந்திருக்கும் ஜன்னல்களும் ஒரே நுழைவாயிலும் கொண்ட கட்டடங்கள் அதில் பணிபுரிபவர்களின் சட்டைப் பையை நினைவுபடுத்தக்கூடும்.

லிங்கமநாயக்கர் மரத்தடியில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து கொண்டு வெற்றிலைப் பொட்டலத்தைப் பிரித்தார். கிராம நிர்வாக அதிகாரியை இன்னமும் காணவில்லை. தலையாரிகளிலும் ஒருவரையும் காணவில்லை. யார் யாரோ பரபரப்புடன் கட்டடம் விட்டுக் கட்டடம் ஓடினார்கள். சின்னச் சின்ன குழுக்களாக அங்கங்கே உட்கார்ந்திருந்தவர்கள், தங்களுக்குள் தணிந்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். மனுக்கள், கோரிக்கைகள், விசாரணைகள், வாக்குமூலங்கள், உத்தரவுகள்...

''என்ன மாமா, இங்க எப்படி?''

நாயக்கரின் வெற்றிலைப் பொட்டலத்துக்கு அழையா விருந்தாளி. தெரிந்த முகம். மற்றபடி மாமனாவது மருமகனாவது?

''வாங்க'' என்று சிரித்து உபசரித்தார் நாயக்கர்.

''என்ன விஷயம்?''

''சும்மா ஒரு காரியமா வந்தேன்.''

''அதான், என்ன விஷயம்னேன்?''

''நம்ம பட்டாவில ஒரு சிக்கல்''

வந்தவனுக்கு அதுதான் வேண்டும். அவன் தாலுகா ஆபீஸ் கட்டடங்களைச் சுற்றி வலை பின்னுகிற சிலந்தி. அரசாங்கச் சிப்பந்திகளுக்கும் அப்பாவி மனிதர்களுக்கும் சேவை செய்யப் பிறந்த சமூகத் தொண்டன் என்றும் சொல்லலாம். சுதந்திர இந்தியாவில் சமூகத் தொண்டுதானே வெற்றிகரமான ஜீவனோபாயம்?

''ஒங்க பட்டாவுலயா மாமா?''



''ஆமா... அது ஒரு வேண்டாத வெவகாரம்.''

''வெவகாரம்னாலே வேண்டாதது தானே.''

அந்தச் சூழ்நிலையின் அமைதிக்குப் பொறுத்தமில்லாத சத்தமான சிரிப்பு. தன் ஹாஸ்யத்தை வேறு யாரும் ரசிக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறவன்.

''என்ன விஷயம்னு சொல்லுங்க. ஆபீஸ்ல எல்லாரையும் எனக்குத் தெரியும். ஒரு நிமிஷத்தில முடிச்சரலாம்.''

''ஒண்ணும் பெரிய விஷயமில்ல. நம்ம பட்டாவில.. இப்ப புதுசா சர்வே பண்ணிக் குடுத்தாங்கல்ல... அதில ஒரு சிக்கல், நம்ம இல்லாம வேற யார் நெலத்தையோ சேத்துப் போட்டிருக்காங்க.''

''அடடா... நம்ம நெலத்தை வேற ஒருத்தர் பேர்ல போட்டாங்களா?''



''இல்ல... வேற யாரு தையோ நம்ம பேர்ல சேத்துப் போட்டாங்க.''

''அதான்... அப்ப நம்ம நம்பரு வேற எங்கயோ போயி ருக்க.''

''நம்மது இருக் குங்க... வேறு யாருதோ... அதும் நம்ம பேர்லயே சேத் துக்கிச்க.''

சமூகத் தொண்டனுக்குப் புரியவில்லை.

''ஒங்கது ஒங்க பேர்ல கரெக்டா இருக்கா?''

''அது இருக்கு''

''அப்புறம் என்ன?''

''இன்னொருத்தனுதும் இருக்கே.''

''தப்பாவா போட்டுட்டாங்க?''

''ஆமா.''

''அவன் இப்ப தகராறு பண்றானாக் கும்?''

''இல்லீங்க...''

''ஓஹோ... அந்தாளும் நமக்கு வேண்டப்பட்டவராக்கும்?''

''எந்த ஆளு?''

''நம்பர் மாறி ஒங்க பேர்ல வந்துருச்சே அந்த நெலத்துக்காரர்...''

''அது யாருன்னே தெரியலியே''

''வி.ஏ.ஓ.கிட்ட கேட்டுற வேண்டியது தானே...''

''அவருக்கே தெரியலியே...''

**ச**மூகத் தொண்டர்களின் நேரம் விலை மிருந்தது. நாயக்கரிடம் உட்கார்ந்திருந்தால் வெற்றிலை பாக்கோடு போக வேண்டியது தான். இது பிரயோஜன மில்லாத சமூகத் தொண்டு என்று புரிந்துவிட்டது.

ஆனால் விஷயம் என்ன என்பதுதான் புரியவில்லை.

**சமூகத் தொண்டர்களின் நேரம் விலைமிருந்தது. நாயக்கரிடம் உட்கார்ந்திருந்தால் வெற்றிலை பாக்கோடு போக வேண்டியது தான். இது பிரயோஜனமில்லாத சமூகத் தொண்டு என்று புரிந்து விட்டது.**

**ஆனால் விஷயம் என்ன என்பதுதான் புரியவில்லை.**

''மாமா, ரொம்பக் குழப்புறீங்க. இப்ப தாலுகா ஆபீசுக்கு எதுக்கு வந்திருக்கீங்க?''

''அதாவது... நம்ம காட்டுக்கு அந்தால பொறம் போக்கா கொஞ்சம் எடம் இருக்கு. முன்ன நான் சின்னப் புள்ளையா இருக்கறப்போ அங்க ஒரு கொளம் இருந்துச்சு... இப்ப என் பட்டா வில அந்த கொளம் இருந்த எடத்தைச் சேத்து சர்வே பண்ணி சேத்துப் புட்டாங் கன்னு நாட்டாண்மைக் காரரு சொல்றாரு.''

''சரி... இங்க எதுக்கு வந்தீங்க?''

''அது நம்முது இல்ல... அந்த நம்பரை காலி பண்ணி விட்டுருங்கன்னு சொன் னேன்... சரி, தாலுகா ஆபீசுக்கு வான்னு சொன்னாரு.''

# மக்களுக்காக!!

## அருள்வாக்கு

நிர்வாஹம் பண்ணுவதற்கு ஒரு தகுதி வேண்டுமென்பது போலவே, ஒருத்தர் அப்படிப்பட்ட தகுதிகள் உள்ளவர்தானா என்று எடை போட்டுப் பார்த்து அவரைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு தகுதி வேண்டும். ஒரு அபேக்ஷகர் (வேட் பாளர்) என்றால் அவர் ஏதோ ஒரு கட்சியில் இருப்பார். அதற்கென்று கொள்கைகள் இருக்கும். ஸ்வயேச்சை அபேக்ஷகர் என்றால் அவருக்கும் ஏதோ கொள்கைகள் இருக்கத்தான் வேண்டும். தேர்ந்தெடுக்கிறவர்கள் இந்தக் கொள்கை களைப் புரிந்து கொள்ளக் கூடியவர் களாக இருக்க வேண்டும்; 'நம் தேசத்தில், தற்போதுள்ள நிலவரங்களில் இந்தக் கொள்கை களின் அடிப்படையில் நிர்வாஹம் செய்வது நல்லதா?' என்று சீர்தூக்கி முடிவு பண்ணக் கூடியவர்களாக வோட்டர்கள் இருக்க வேண்டும். "அதைச் செய்கிறேன், இதைச் செய் கிறேன்" என்று எதையாவது சொல்லிக் கொண்டு வோட்டு கேட்டால், "அது ஸாத்யந் தானா? ஸாத்யமானாலும் அப்படிச் செய்ய லாமா?" என்று யோசித் துப் பார்த்து, பேச்சில் ஏமாந்து போகாமல் வோட் போடக் கூடியவர் களாக இருக்க வேண்டும். மொத்தத்தில், குடி யரக எல்லாருக்குமானாலும், அதிலே ராஜாங் கம் அமைப்பவர்கள் எல்லா வர்க்கத்தினருக் கும் ப்ரதிநிதிகளாயிருக்க வேண்டியவர்களா னாலும், அவர்களுக்கு நிர்வாஹத்துக்கான யோக்யதாம்சம் இருக்க வேண்டியிருக்கிறது; அப்படிப்பட்ட யோக்யதாம்சம் அவர்களுக்கு இருக்கிறதா என்று பரிசீலனை பண்ணி அவர் களைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு யோக்ய தாம்சம் வேண்டியிருக்கிறது. அதாவது அபே க்ஷகர், வோட் போடுபவர் இருவருக்கும் யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது.



ஒரு வேலை கொடுக்கும் போது, மனுப் போட்ட பல பேரிலே யாருக்குக் கொடுக்கலாம் என்று ஸெலக்ட் செய்ய வேண்டியிருக்கிறது. ரொம்பவும் விஷயம் தெரிந்தவர்களைத் தான் ஸெலக்ஷன் கமிட்டியில் போட்டு அவர்கள் மூலம், மனுப் போட்ட பல பேரில் ஒருத் தருக்கு வேலை கொடுக்கிறார்கள். அதாவது வேலைக்கு வைக்கிறவனின் யோக்யதாம்சத் தைப் பரீக்ஷித்து அவனை ஸெலக்ட் செய்வதற்கு அவனை விட யோக்யதாம்சம் வாய்ந்தவரை நாட வேண்டியிருக்கிறது. குடியரசுத் தேர்தலில் அந்த அளவுக்கு இல்லா விட்டாலும், இன்னாருக்கு இன்ன யோக்ய தாம்சம் என்று சீர்தூக்கிப் பார்க்க வேண்டி யவர்களான வோட்டர்களுக்கும் ஓரளவுக்கு யோக்யதை வேண்டித்தான் இருக்கும்.

தேச நிர்வாஹம், அரசியல் கொள்கைகள் முதலியவற்றைப் பற்றி ஓரள வேனும் விஷயஞானமுள்ளவர்கள் ஆலோசனை செய்து வோட் கொடுத்தால்தான் ஆட்சி ஸரி யானவர்களிடம் போகும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

சமூகத் தொண்டனுக்குக் கோபம் தலைக்கேறியது.

''ஏன் மாமா... அது பொறம்போக்குன் னீங்க. இப்ப கவர்மெண்ட்டே ஓங்க பேர்ல பட்டா போட்டு குடுத்துருக்க. வெக்கக்கிற வேண்டியதுதானே.''

''எதை வெக்கக்க?''

''நெலத்தைத்தான்''

''அது நம்முது இல்லியே?''

''அட... அதான் இப்ப ஓங்க பேர்ல போட்டாங்கல்ல?''

''அதைத்தான் தப்புன்னு சொல்லி மாத்தப் போறேன்.''

நாயக்கரின் நேர்மை ஆடம்பரமில்லா தது. சமூகத் தொண்டர்களால் நேர்மையை மட்டும் சகித்துக் கொள்ள முடியாது.

''மாமா, அவனவன் பொறம்போக்கு நெலங்களைச் கம்மாவே வளைக்கப் போடு றான். ஒங்களுக்கென்னடான்னா கவர் மெண்ட்டே பாத்து பட்டா போட்டுக் குடுத் துருக்கு. அதைப் போயி மாத்தறேன்றீங் களே!''

''நானும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போனேன் பாலு.''

கிராம நிர்வாக அதிகாரியும் இரண்டு தலையாரிகளும் வந்து சேர்ந்து கொண் டார்கள். நாயக்கர் கை குவித்தபடி எழுந்து கொண்டார்.

# ஐசிஎஸ்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

பதிவு அலுவலகம்: 41B, வெங்கிடசாமி சாலை (மேற்கு)
ஆர்.எஸ்.புரம், கோவை - 641 002 போன்: 48466

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 37463




50 ஆண்டுகளுக்கு மேலான அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் | குறுகிய கால டெபாசிட் | | | பிக்சட் டெபாசிட் திட்டம் | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| காலம் | 1 நாள் முதல் 90 நாள் | 3 மாதங்கள் முதல் 6 மாதங்கள் | 6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் | 12 மாதங்களுக்கு | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| வாடிக்கையாளர் வசதிக்கேற்ப 1 மாதம், 3 மாதம் மற்றும் 6 மாத கால இடைவெளிகளிலும் வட்டி விகிதம் வழங்கப்படும். | | வழங்கும் வட்டி விகிதங்கள் | ஆண்டுக்கு ஒருமுறை | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | 6 மாதத்திற்கு ஒருமுறை | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | மாதம் ஒருமுறை அல்லது 3 மாதத்திற்கு ஒருமுறை | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

### குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

### கபிட்சம் வைப்புத் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும்போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

**ரூ.10,000/- செலுத்தினல் 45 மாதங்களில் ரூ.21,000/- கிடைக்கிறது.**

ரூ.10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 45 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1320 | 2880 | 4720 | 6480 | 10040 |
| 250 | 3300 | 7200 | 11800 | 16200 | 25100 |
| 500 | 6600 | 14400 | 23600 | 32400 | 50200 |

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

ரூ. 5/- செலுத்தி உறுப்பினராகி பயன் பெறுவீர்!

செழுமை தரும் சேமிப்புத் திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் ஐசிஎஸ்!

''பாலு... நீயாவது எடுத்துச் சொல் லுப்பா.''

''மாமா... இப்பிடி வாங்க சொல் றேன்.''

தலையாரி ஒருவன் பாலுவிடம் வந்து, ''பொறம்போக்கு நெலத்தை எப்பிடிய்யா பட்டா போட்டீங்கன்னு தாசில்தாரு பிடிச்சு வெரட்டிருவாரு. வெவகாரம் ரொம்ப முத்திப் போகும்னு சொன்னா கேக்க மாட் டேங்குறார்ண்ணே.''

''அது வேற இருக்கு-'

''அய்யா வேலைக்கே ஒலை வெச் சிருவாரு போல இருக்குண்ணே''

''மாமா, கேட்டீங்களா?''

''அதுக்காக ஊர் நெலத்தைப் போயி உழுதுக்கச் சொல்றீங்களா?''

''அட... வேணாமய்யா. அது பாட் டுக்கு ஒன் பட்டாவில இருந்துட்டுப் போகுது. நீ ஒண்ணும் கிஸ்தி கட்ட வேணாம். அப்புறம் ஒனக்கென்ன?''

''அரசாங்கச் சொத்தைத் திருப்பி ஒப் படைக்க வேணாமா?''

''ஆமா... அரசாங்கம் ஒங்கிட்ட வந்து கேட்டுச்சா?''

''அது என்னாங்க சார்... நியாயம்னு ஒண்ணு இல்லியா?''

அரசாங்க அதிகாரிகளிடம் நியாயம் கேட்கலாமா? அவருக்குக் கோபம் வந்தது.

அவர்களைச் சுற்றி ஒரு கூட்டம் கூட ஆரம்பித்தது. பிரச்னை என்னவென்று தெரி யாமலே பல அபிப்ராயங்களும் அறிவுரை களும் சொல்லப்பட்டன. நாயக்கருக்கு யாருக்குப் பதில் சொல்வது என்றே புரிய வில்லை. இந்தச் சந்தடியில் அருகே வந்து நின்ற காரை யாரும் கவனிக்கவில்லை.

டவாலி போட்ட சேவகன் ஒருவன் இறங்கி வந்து, கிராம நிர்வாக அதிகாரியை அழைத்தான்.

கிராம அதிகாரியின் முகத்தில் கலவரம் தெரிந்தது. பரபரப்புடன் காருக்கருகே ஓடி னார். கார் ஜன்னல் அதிக உயரத்தில் இல்லை என்பதால் மட்டுமே அவர் அப்படிக் குனிந்து நின்றார் என்று சொல்ல முடியாது. அவரது பணிவு ராஜவிசுவாசத் தின் இன்னொரு அடையாளம்.

தலையாரிகள் கூட்டத்தைக் கலைந்து போகும்படி சொன்னார்கள். கார் புறப் பட்டுப் போனது. கிராம நிர்வாக அதிகாரி கூடவே ஓடினார். தலையாரிகளும் அவ ரோடு ஓடினார்கள்.

டவாலி போட்ட சேவகன் நாயக்கரை அழைத்தான். சுதந்திர சர்க்காரின் அதிகாரச் சக்கரத்தின் முக்கிய ஆரமான பதவியில் இருப்பவரின் அறைக்கு வேண்டிய எல்லா அடையாளங்களும் அந்த அறையில் இருந்தன. அதிகாரியின் தலைக்குப் பின்னே மகாத்மாவின் படம் மாட்டப்பட்டிருந்தது. நாயக்கருக்கு அந்தக் கிழவரின் சிரிப்பு ஆறு தலளிப்பதாக இருந்தது.

''ஒங்க பேரு?''

நாயக்கரை அமரச் சொல்லவில்லை. கிராம நிர்வாக அதிகாரி கூட அமரவில்லை.

''எந்த ஊரு?''

''அப்பா பேரு?'' - கேள்விகள் தொடர்ந்தன.

''815-ம் நம்பர் பட்டா இது... ஒங்கது தானா?''

''ஆமாங்க''

''இதில இருக்கற நெலம் எல்லாம் ஒங்கதுதானா?''

''இல்லீங்க... மொத சர்வே நம்பரு மட்டும்தாங்க என்னுது!''

''இன்னொரு நம்பரு?''

''அதுதான் சார்... இப்ப நான் சொன் னேனே, என்க்ரோச்மெண்ட்'' - கிராம அதி காரி குறுக்கிட்டுச் சொன்னார்.

''நீங்க கம்மாருங்க... இன்னொரு நம்பர் யாருது?''

''யாருதுமில்லீங்க சார்... முன்ன கொளமா இருந்திச்சு...''

''இப்ப ஒங்க நெலம் ஆயிருச் சாக்கும்?''

அதிகாரியின் குரல் நையாண்டி செய்வ தாக இல்லை. அதில் ஒரு கடுமை இருந்தது.

''சர்வே பண்ணும் போது தவறுதலா எம் பேர்ல சேத்துட்டாங்க.''

''கதையளே மாத்தறார் பாருங்க சார்.''

''நீங்க கம்மாருங்க... யாரு தவறுதலா சேத்துட்டாங்க?''

''சர்வே பண்ணும் போது... சர்வே பண்ணின ஆளுங்கதான்...''

''ஊரு ஒலகமெல்லாம் சர்வே பண்ணி னதில தவறு ஒண்ணுமில்ல. ஒரு பட்டா வுல மட்டும் தவறுதல் ஆயிருச்சாம் சார்.''

''நீங்க பேசாம இருக்கப் போறீங்களா இல்லியா? என்னய்யா, முழிக்கிற? சர்வே பண்ணினவங்க கிட்ட பொய்யைச் சொல்லி, பொது நெலத்தை ஒம் பேர்ல போட்டுக் கிட்டு இப்ப நாட்டாமைக்காரர் கண்டு பிடிச்சுக் கேட்டவுடனே நல்லவன் போல நடிக்கிறியா? தவறுதல் அது இதுன்னு கதை கட்டுற... இல்ல?''

''சார்... சார்... இல்லீங்க சார்.''

''என்னய்யா இல்லை - நொள்ளை... ஒம் மேல நடவடிக்கை எடுக்கப் போறோம் தெரியுமா?''

நாயக்கர் தலையை உயர்த்தி விட்டத்தை வெறித்தார். இப்போதும் காந்தி சிரித்தபடியே இருந்தார்.

# சக்கரவர்த்தித் திருமகன்

**"இவளுடைய பிடிவாதத்தையும் கர்வத்தையும் நீங்கள் எப்படியாவது அழிக்க வேண்டும். காட்டில் பிடித்த பெண் யானையை எப்படி வசப்படுத்துகிறோமோ அதுபோல் இவளைச் சீக்கிரம் நீங்கள் திருத்த வேண்டும்"**

**ம**னத்தில் நிச்சய புத்தியிருந்தால் எந்த சங்கட நிலையிலும் தைரியம் உண்டாகும். சோகத்தால் வாட்டப் பட்ட சீதை அரக்கனைக் கண்டு பயமேயில்லாமல் பேசலானாள். ஒரு துரும்பைக் கிள்ளித் தனக்கும் ராவணனுக்கும் மத்தியில் வைத்துப் பேசினாள்.

பஞ்சவடியில் சந்நியாசி வேஷம் பூண்டு, தான் வைத்த காய் கிழங்குகளுக்கு முன் உட்கார்ந்து ராவணன் தன் குலத்தையும் வீரத்தையும் பேசினான் அல்லவா? அதற்கு ஒரு எதிரொலி போல் இப்போது சிறையில் கிடந்த சீதை பேசினாள் :

''நான் யார் என்பதை அறிந்து கொள். தசரதராஜன் மூவுலகங்களிலும் புகழ் பெற்ற அரசன். தருமத்துக்கு ஒரு அசையா அணையாகப் பல்லாண்டு அரசு புரிந்த மகாராஜன். சத்தியம் காத்தவன். அவனுடைய குமாரன் ராமன், என் புருஷன். தேவனைப் போன்ற அந்த ராமன் என் நாதனாவான். சிம்மத்தின் பலம் பெற்ற வீரன். அவனும் அவன் தம்பி லக்ஷ்மணனும் உன்னுடைய உயிரை வாங்கக் காத்திருக்கிறார்கள். கரனும் அவன் சேனையும் ஜனஸ்தானத்தில் என் நாதனால் நிர்மூலமாக்கப்பட்டார்கள் என்பதை அறிவாய். கருடன் விஷப் பாம்பைத் தூக்கிக் கொண்டு போவது போல் அவ்வளவு சுலபமாக உன்னுடைய பெருஞ்சேனை ஜனஸ்தானத்தில் ராமனால் ஒரு முகூர்த்த நேரத்தில் அழிக்கப்பட்டது. அந்த ராமனை, தேவாசுரர்களால் கொல்லப்பட மாட்டாய் என்று வரம் பெற்ற நீ, விரோதியாக்கிக் கொண்டாயல்லவா? அவனால் நீ உன் மரணத்தை அடைவாய் என்பது நிச்சயம்; தப்ப மாட்டாய். நீ பெற்ற வரம் உன்னைக் காக்க மாட்டாது. வேள்வியில் யூபஸ்தம்பத்தில் கட்டிய ஆட்டைப் போல் நிற்கிறாய் என்பதை அறிந்து கொள். ராமனுடைய கோபப் பார்வை உன் மேல் படுவதுதான் தாமதம். கடலை உலரச் செய்யும் சந்திரனை ஆகாயத்திலிருந்து கீழே இறக்கியுமாவது என்னை என் நாதன் மீட்பான், நிச்சயம். நீ செய்த தீவினை உன்னையும் உன் லங்கையையும் அழித்துப் பாழாக்கப் போகிறது.

''என் வீர புருஷன் அரக்கர்களுக்கிடையில் தைரியமாகத் தண்டகாவனத்தில் தனியாக வசித்தான். எதிர்த்து வந்த அரக்கர்களை வீரனைப் போல் யுத்தம் செய்து கொன்றான். அவனில்லாத

ராஜாஜி

சமயம் பார்த்து நீ திருடனைப் போல் என்னைத் தூக்கி வந்தாய். இந்தத் தீச் செயலின் பயனை அனுபவிப்பாய், தப்பமாட்டாய். நீயும் உன் குலமும் அழிந்து போகும் காலமானது அருகில் வந்து விட்டபடியால் விதி உன்னை இந்தப் பாவத்தில் தூண்டித் தள்ளிற்று! அழிந்து போகும் காலத்திலேதான் இத் தகைய துர்புத்தி உண்டா கிறது.

''உன்னை விரும்பும் படி என்னைக் கேட்கிறாய். அது ஆகாத காரியம் என் பதை நீ அறியவில்லையா? அன்னப் பட்சி காக்கை யிடம் போகுமா? வேள்வி செய்யும் வேதிகையண்டை ஒழுக்கம் தவறிச் சண்டாள னான ஒருவன் கிட்டப் போக முடியுமா? உயிரையா வது உடலையாவது காப் பாற்றிக் கொள்ள வேண்டும் என்று எனக்குக் கொஞ்சமும் ஆசையில்லை. உலகத்தா ரால் இகழப்பட்டு உயிர் வைத்துக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. நான் பயப்பட்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்ள உன் வசமாவேன் என்று எண்ணாதே!''

இவ்வாறு சொல்லி விட்டு மௌன மடைந்தாள்.

''அப்படியா?'' என்றான் ராவணன். ''சரி, பன்னிரண்டு மாதம் கெடுவு உனக்குத் தருகிறேன். நீ என்னை மணந்தால் நல்லது; இல்லையென்றால் அந்தத் தவணை முடிந்ததும் என் சமை யற்காரர்கள் என்னுடைய காலை ஆகாரத்துக்கு உன் உடலைச் சமைப் பார்கள்.'' இவ்வாறு சீதையை எச்சரித்து



விட்டுக் காவற்கார ராக்ஷசிகளுக்குத் தனியாக உத்தரவிட்டான்.

''இவளுடைய பிடிவாதத்தையும் கர்வத்தையும் நீங்கள் எப்படியாவது அழிக்க வேண்டும். அசோக வனத்தில் இவளைத் தனியாக வைத்து, பயத்தா லும் நயத்தாலும் சாமர்த்தியமாக இவளைத் திருத்துங்கள். காட்டில் பிடித்த பெண் யானையை எப்படி வசப் படுத்துகிறோமோ அதுபோல் இவளைச் சீக்கிரம் நீங்கள் திருத்த வேண்டும்'' என்று உத்தரவிட்டுக் கடுஞ் சினத்தோடு தன் அரண்மனைக்குச் சென்



''முன்பு இதே காரியத்தை முடித்துக் கொடுக்க இந்தத் தொகுதி முன்னாள் எம்.எல்.ஏ. ஆயிரம் ரூபாய்தான் லஞ்சம் கேட்டார். நீங்க ஐயாயிரம் ரூபாய் கேட்கி றீங்களே!''

''இந்த தொகுதியில் ஐந்து தடவை தேர்தல் ஒத்திவைக்கப்பட்டதே ஞாபக மில்லையா?''

- க. நாகராஜன்.

''அடியே! நம்ம பையனோட புஸ்தக மூட்டை மட்டும் வாசல்ல வந்து நிக்குது. பையனைக் காணலைடீ!''

''அதுக்குக் கீழேதான் எங்கேயாவது சிக்கிக்கிட்டிருப்பான். சரியா தேடிப் பாருங்க.''





றான்.

சீதையை அழைத்துக் கொண்டு ராக்ஷசிகள் அசோக வனம் சென்றார்கள். அது மிக ரம்யமான அந்தப்புர உத்தியானவனம். பறவைகளும் புஷ்பங்களும் காயும் பழமும் நிறைந்த மரங்களும் உள்ள தோட்டம். அங்கே சீதை கோரமான அரக்கிகளின் காவலில் சிறைப்பட்டுத் துயரக் கடலில் மூழ்கிக் கிடந்தாள். ராமனும் லக்ஷ்மணனும் எப்படியாவது விஷயம் தெரிந்து கொள்வார்கள், தன்னை மீட்பார்கள், அரக்கர்களின் மிரட்டல்களுக்குப் பயப்படாமல் உயிர் வைத்துக் கொண்டிருக்க வேண்டும், வீரனாகிய தன் நாதன் அரக்கனை அழித்து விடுவான், மறுபடியும் ராமனுடன் சேர்ந்து வாழும் நாள் சீக்கிரத்தில் வரும் என்று நம்பி, ராக்ஷசிகளின் மிரட்டலுக்குப் பயப்படாமலும் எவ்வளவு நயமாகப் பேசினாலும் அதனால் மோசம் போகாமலும் இருந்து வந்தாள்.

சீதை அசோக வனத்தில் துன்பப்பட்டுக் கிடந்தது ஒரு நாளல்ல, இரண்டு நாட்களல்ல, பல மாதங்கள். இப்படி அனாதையாகத் துன்பப்பட்டாள்.

மகாவீரன் ஹனுமான் கடல் தாண்டி வந்து தேவியின் துயரத்தைப் பார்த்து, அந்தத் துயரத் தீயையே கொண்டு லங்காபுரியை எரித்து விட்டு, ''ராமன் வருவான், பயப்படாதே!'' என்று சீதைக்குச் சொல்லும் நாள் பின்னால் வரும்.

நம் நாட்டில் துயரப்படும் பெண்கள் அனைவரும் சீதா தேவியின் அம்சம். ஆண்களாகப் பிறந்தவர்கள் அனைவரும் ஹனுமானைப் போன்ற பெண்ணைக் காக்கும் சுத்த வீரர்கள் ஆவார்களாக.

இப்போது மறுபடி ராம லக்ஷ்மணர்களை நாம் விட்ட இடத்திற்குப் போவோம்.

(தொடரும்)



''போய் தரகரே.... அந்தப் பொண்ணு பேர்ல சந்தேகமா இருக்குது. இந்தச் சம்பந்தம் வேண்டாம்பா.''

''ஏங்க?''

''எம் பொண்ணு நைட் சபாலே பரத நாட்டியம் ஆடுவா'ன்னு பொண்ணோட அப்பன் சொல்றானே?''

''என்ன இந்த போட்டோகிராபர் எல்லாருடைய நிழலையும் படம் எடுத்திருக்காரு?''

'''நிழற்படம் எடுங்க'ன்னு சுத்த தமிழ்லே சொல்லாதீங்கன்னு அப்பவே சொன்னேன், கேட்டீங்களா?''

- சிரிப்பு சாமியார்.





# தத்து



தற்போதைய சினிமாக்களில் தடுக்கி விழுந்தால் தத்துவப் பாட்டுதான்! சில பாத்திரங்களின் கையில் சிக்கிக் கொண்டு தத்துவங்கள் கதறக் கதற பிழிந்து தரப்படுகின்றன. நாமும் நம் பங்குக்கு இங்கே சில தத்துவப் பாடல்களைப் பிழிகிறோம்.

**(''போனால் போகட்டும் போடா'' மெட்டில் பாடிப் பழகவும்.)**
**ராகம் : ''அடிதடிப் பிரியா''**
**தாளம் : ''கண்டசாபு மிதிஉதை''**

*பல்லவி (கவுண்டமணி பாடுகிறார்) :*

போனால் போகட்டும் போடி - இவன்
புண்ணாக்கு வாயெல்லாம் புளிச்சமாவு இட்லி
போனால் போகட்டும் போடி!

*சரணம் (1) (அவரே...)*

உளுத்தம் பருப்பு ஒரு மூட்டை - அதை
உடைத்து அரைத்தவன் ஒருவனடி
கழுத்து வரைக்கும் தின்று விட்டு - தினம்
கட்டை சாய்ப்பவன் ஒருவனடி!

சமையல் கட்டில் பட்லரடி - அவன்
சமைத்துக் கொட்டின இட்லியடி - அதைத்
தின்னு கொழுத்தவன் தடியனடி
போனால் போகட்டும் போடி!

*சரணம் (2) (செந்தில் பாடுகிறார்) :*

அரிவாள் மீசை வைத்தவர் எல்லாம்
அறிவாளி ஆக முடியாது
சொறிநாய், பன்றியென்று பிறரைச் சொன்னால்
சூப்பர் ஃபிகர் உனக்கு மடங்காது!

போனால் போகட்டும்
போங்கண்ணே - உங்க
மூஞ்சியிலே வழியுது நாலு லிட்டர்
விளக்கெண்ணே!
போனால் போகட்டும்
போங்கண்ணே!
(அவர் விரட்ட இவர் ஓடுகிறார்....)

- விவேக்

# ம் படும் பாடு!

மெட்ரோ ப்ரியா (நான்) :
ரியா... ப்ரியா நாளை நம்
நாளே...
ரியா.... ப்ரியா ஆளும் நம்
ஆளே...
என் வீடு சின்னத்திரை என்றாலும்,
உன் வீடு வெள்ளித் திரை
என்றாலும்
நாளும்... நாளும்
முன்னேறுவோம்...

ஐ லவ் இந்தியா ப்ரியா :
திரை மாறலாம்; நடிப்பு ஒன்றுதான்
சிரிப்பு மாறலாம் முகம் ஒன்றுதான்
துண்டு மாறலாம் கட்சி ஒன்றுதான்
ஆட்சி மாறலாம் லஞ்சம் ஒன்றுதான்
உடை மாறலாம் உடம்பு ஒன்றுதான்
நாம் ப்ரியா.... அது ஒன்றுதான்!
நம் ஒற்றுமை.... ஒ... ஒ.. ஒ..

- ப்ரியா



ஜவ்வுல ஜல்வா ஜுவ்வுல உல்வா
வ்வுல கல்வா ஜம்புல ஜமபா
தல் என்பது சுசப்பு
லைக் கடிக்கும் செருப்பு
கம் என்பது உருண்டை -
உன்னைப்
வதுதான் பெரும் கொடுமை
ம்மா சும்மா சும்மா
ா கும்மா கும்மா
_ மேல கோட்டு - நம்
க்கு இதுதான் ரூட்டு - உன்
ல் தெரியுது வேட்டு - அட
பாடு நீ பாட்டு!
மா சும்மா சும்மா
ம்மா யம்மா
கும்மா கும்மா
ண்ட் என்றாலே ஊழலடி
பில் தெரிவது லஞ்சமடி
P சூட்கேக
ா தூங்குது ஹாட்கேஷு!
ற்றி பெற்றால்

கலர்ப்படம் தாண்டி கண்ணே!
அதுவே தோல்வி என்றால்
அவார்டுக்கு ஒக்கே ஆகும்!
ஓ லங்குட லங்குட ஜம்புட ஜம்புட
டங்குட டங்குட டங்குட டங்கா

- எஸ். வி. சேகர்



# சினிமாவுக்குத் தாவும் அரசியல்வாதிகள்!

சினிமாவிலிருந்து அரசியலுக்கு அநேகம் பேர் வருகிறார்கள். ஆனால் அரசியல்வாதிகள் யாரும், சினிமாப் பக்கம் போகிறதில்லை. (திரையில் 'வேறு என்ன ஸ்பெஷல் நடிப்பு' என்கிற உன்னத யோசனையாக இருக்கலாம்!)

அ. வாதிகள் சிலர் சினிமாவில் நடித்தால் அவர்களைப் பற்றி என்ன மாதிரி கிசுகிசு வரும்?

சில சாம்பிள்கள் இதோ :



● "பட்டணத்தில் பெட்டி" என்ற படத்தில் முதன் முதலாக நரசிம்மராவ் சூட்கேஸுடன் நடிக்கிறார். "ஒன்னா இருக்கக் கத்துக்கணும்" என்ற படத்தில் இவருடன் அர்ஜுன் சிங்கும் இணைந்து நடிக்கிறார் என்பது லேட்டஸ்ட் நியூஸ்.

● "துர்க்கை விரதம்" படத்திற்காக உண்மையிலேயே மூன்று நாட்கள் விரதம் இருந்ததே படத்தின் வெற்றிக்குக் காரணம் என்று கூறிக் கொள்ளும் ஜெயலலிதாவின் அடுத்த படம் "பதில் சொல்வாள் பத்ரகாளி."





● "நீதிக்கு முன் நீயா? நானா?" என்ற படத்தில் அழகிரியும், வை.கோவும் நடித்து வருவது தெரிந்த சேதி. இவர்களில் யார் ஹீரோ, யார் வில்லன் என்பது இன்னும் முடிவாகவில்லையாம்! இது எப்படி இருக்கு?



● "அரங்கேற்ற வேளை" படத்தின் இறுதிக் கட்ட வேலைகள் நடந்து வருகின்றன. இப்படத்தின் அனைத்துப் பாடல்களையும் தானே எழுதியுள்ளதால் இந்தப் படம் தனக்கு ஒரு பெரிய பிரேக்கைத் (!) தரும் என்கிறார் நாஞ்சில் மனோகரன்.



● தங்களுக்குள் எப்போதும் சண்டை போட்டுக் கொள்ளும் நண்பர்கள் (!) இருவரும் இணைந்து, தங்களை வஞ்சித்து ஏமாற்றிய பெண்ணைப் பழிவாங்கத் திட்டமிடுகிறார்கள். இதுதான், "இரட்டைக் குழல் துப்பாக்கி"யின் கதை. இதில் ஒரு குழல் வாழப்பாடி, மற்றொரு குழலாக நடிப்பவர் மூப்பனார்.



● ஆசிட் புகழ் சந்திரலேகா நடித்த "ஒரு தாயின் சபதம்" சரியாக போணியாகாததால் இப்போது வீட்டில் கேரம் ஆடிக் கொண்டிருக்கிறார்.

கற்பனை :
கடையநல்லூர் கணேசன்.

ஒரு டீ.வி. பட்டிமன்றம்



அகிலா கார்த்திகேயன்

### பட்டிமன்ற நடுவர் துஞ்சநாதன் :

அனைவருக்கும் தூக்கம்.... மன்னிக்கவும் வணக்கம். இப் பட்டிமன்றம் நடக்கும் போது யாரும் தூங்காமல் விழித்திருக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். அப்படியே தூக்கம் வந்தாலும் குறட்டை விட வேண்டாமென வேண்டிக் கொள்கிறேன். ஏனெனில் இந்தப் பட்டிமன்றத் தலைப்பே 'தூக்கத்தைக் கெடுக்கும் வலிமை குறட்டைக்கா? கொசுவிற்கா?' என்பதே. அதாவது நாம் தூங்கும் போது விடும் குறட்டை பிறர் தூக்கத்தைக் கெடுப்பதைக் குறிப்பிடுகிறோம்.

நேற்றிரவு நான் இந்தப் பட்டிமன்றத்திற்காக ஊரிலிருந்து ரயிலில் வந்து கொண்டிருந்த போது என் வீட்டில் எச்சரித்து அனுப்பியது ஞாபகம் வந்தது.

''ரயில்லே போகும் போது அசந்துடப் போறீங்க! பணம் பத்திரம்'' என்று சொல்லியிருந்தாள். ஆனால் ரயிலில் கொசுத் தொல்லையோ, குறட்டைத் தொல்லையோ எதுவும் இல்லை. ஆகவே சுகமாக நான் தூங்கி விட்டேன். அதைச் சாதகமாக்கி, யாரோ என் பர்ஸை அபேஸ் செய்திருக்கிறார்கள்.

தூக்கத்தைக் கெடுக்கும் குறட்டையோ, கொசுவோ இல்லாததால் என் பர்ஸை பறி கொடுத்து விட்டு இப்போது கொசுவா குறட்டையா என்று தீர்ப்புச் சொல்லக் காத்து நிற்கிறேன்.

இப்போது 'குறட்டையே' என்று வாதாட, பேராசிரியர் படுக்கையரசன் விழிப்புடன் வருகிறார்.

### பேராசிரியர் படுக்கையரசன் :

### குறட்டையே!

நடுவர் அவர்கள் சொன்னார்கள், தான் ரயிலில் சுகமாகத் தூங்கி விட்டதால் தன் பணத்தை இழந்து விட்டதாக. அவர் சொல்கிறார், ரயிலில் குறட்டை சப்தமேயில்லை என்று. அவர் வந்த பெட்டியிலேயே பயணம் செய்த எனக்குத்தானே தெரியும் அவர் விட்ட கடூரமான குறட்டையைப் பற்றி. அந்த குறட்டையால் பெட்டியில் அவரைத் தவிர யாரும் தூங்கவில்லை. அதற்கு தண்டனையாக இருக்கட்டும் என்று அவர் பர்ஸை நான்தான் அபேஸ் செய்தேன். இவரே பட்டிமன்ற நடுவராக வருவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை.... இப்போதாவது உங்கள் அனைவருக்கும் புரிந்திருக்குமென நினைக்கிறேன்... தூக்கத்தைக் கெடுக்கும் ஆற்றல் குறட்டைக்கே அதிகமென்று.

''தீயினால் சுட்டபுண் உள்ளாறும் - ஆறாதே நாவினால் சுட்ட வடு'' என்கிறார் வள்ளுவர். அதாவது, நாவிலிருந்து உருவாகும் குறட்டை, தீயினால் சுட்ட வடுவை விட உயர்ந்தது என்கிறார். ஏன், கவி பாரதி என்ன சொல்கிறான்?

'மங்கியதோர் நிலவினிலே கனவினிது கண்டேன்' என்கிறான். அதாவது பாரதியார் தன் வீட்டில் சுகமாகத் தூங்காமல் நிலா வீசும் இடத்திற்கு ஏன் போய்ப் படுக்க வேண்டும்? கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும். வீட்டில் குறட்டை சப்தத்தில் தூக்கம் வராது போகவே வெளியே போய்த் தூங்கிக் கனவு காண்கிறார்.

ஆகவே தூக்கத்தைக் கெடுப்பதில் குறட்டைக்கே வலிமை அதிகம் என்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

"திருமதி கொசுவாம்பிகை

– கொசுவே!



# தூக்கத்தைக் கெடுப்பதில் வலிமை வாய்ந்தது கொசுவா? குறட்டையா?

தூங்கிக் கொண்டிருப்பவரை எழுப்பலாம். தூங்கு வது போல் நடிக்கும் ஒருவரை எழுப்புவது கடினம். எதிர் அணித் தலைவர், நடுவர் குறட்டை விட்டதால் ரயிலில் தன் தூக்கம் கலைந்து விட்டதாக புருடா விடுகிறார். ரயில் போடும் சப்தத்தை விடவா குறட்டைக்கு வலு அதிகம்? எதடா நாளை எக்குத் தப்பாக

'குறட்டையே' என்ற அணிக்கு வாதாட வேண்டியிருக்கிறதே என்ற கவலையால் அவர் தூக்கம் கெட்டிருக்கும். அதுதான் உண்மை.

இதில் பரிதாபம் என்னவென்றால் குறட்டை எங்கிருந்து வருகிறது என்பது கூட எதிர் அணிக்குத் தெளிவாகத் தெரியவில்லை. நாவிலிருந்து வருவதாக வீண் வாதம் செய்கிறார். குறட்டை விடும் போது நாக்கு அசைவதில்லை. ஒருவேளை அவருக்கு அசையுமோ என்னவோ...

நான் கூறுகிறேன், அந்தக் குறளில் 'நாவினால்' என்பதற்குக் கொசுவின் நாக்கு என்றே கொள்ள வேண்டுமென்று! நாவை நீட்டிக் கடிக்கும் கொசு ஏற்படுத்தும் வடு எங்கே... தீயினால் சுடும் வடு எங்கே... நடுவர் சிந்தித்துப் பார்க்கட்டும்.

(நடுவர் : அம்மா தாயே... எனக்கு நாவடு எல்லாம் தெரியாது. மாவடுவைப் பத்திதாம்மா தெரியும்!)

அப்ப உங்களைக் கொசு கடித்திருக்கும்.... அதன் வடுதான் 'மா'வடு! எதிர் அணிக்காரர் பாரதிக்கு வீட்டில் குறட்டைத் தொல்லை. ஆகவேதான் மங்கியதோர் நிலவில் வெளியே போய்ப் படுத்தார் என்கிறார். அதே பாரதி 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று மட்டும் பாடி விட்டு 'கொசுவும் ஈயும் எங்கள் ஜாதி, என்று ஏன் பாடவில்லை என்று கூறட்டும் பார்க்கலாம். நான் சொல்கிறேன், அவர்







காலத்தில் காக்கை, குருவி, நாய், பூனை எல்லாம் இருந்தது... பாடினார். ஆனால் கொசு இல்லை.... அப்படி இருந் திருந்தால்

நல்லதோர் கட்டில் செய்தே - அதில்
நலங்கெட கொசுவிடம் படுப் பதுண்டோ! என்றுதான் பாடியிருப்பார்.

## புலவர் கன்இடுங்கியான்

### - குறட்டையே!

கம்பர் கத்தரிக்காயைப் பற்றிப் பாட வில்லை. ஆகவே ராமாயண காலத்தில் கத்தரிக்காயே இல்லை என்றானாம். அது போல அம்மையார் அவர்கள் பாரதி பாட வில்லை. ஆகவே அவர் காலத்தில் கொசுத் தொல்லையேயில்லை என்று வாதாடு கிறார்.

''மோனத் திருக்குதடீ! இந்த வையகம்
மூழ்கித் துயிலினிலே'' என்று பாடிய
பாரதி

நானொருவன் மட்டிலும் - பிரி
வென்பதோர்
நரகத் துழலுவதோ'' என்கிறார். சற்று
சிந்தித்துப் பாருங்கள்.

எல்லோரும் துயிலினில் மூழ்கிக் குறட்டை விட்டுக் கொண்டிருக்க, தான் மட்டும் துயிலைப் பிரிந்து நரகத்துழல் வதாகக் கூறியிருப்பது புரியும்... பிறர் விடும் குறட்டை பாரதியையே பாதித்திருக் கிறது!

'இங்கு குறட்டை விட்டோரெல்லாம் கோட்டை விட்டார்' என்று குறட்டைக்கே முக்கியத்துவம் கொடுத்து பட்டுக்கோட் டையார் பாடியுள்ளார். குறட்டை விட் டோரை விட, குறட்டை கேட்டோரெல் லாம் தூக்கம் கெட்டவராய் கோட்டையும் பேட்டையும் விழித்துக் கொண்டுதான் இரிய வேண்டியிருக்கும். குறட்டை அமை தியைக் கெடுக்கும் என்பதாலேயே

தூக்கம் உன் கண்களைத் தழுவட்டுமே
அமைதி உன் நெஞ்சில் நிலைக் கட்டுமே - என்று பாடியிருக்க வேண்டும்.

கொசு விரட்டிகள் ஆயிரம் வந்து விட்டன. ஆனால் குறட்டை விரட்டி இன் னும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆகவே குறட்டைதான் வீரியம் வாய்ந்தது என்று தெளிவாகத் தெரிகிறது.

## பேராசிரியை திருமதி துயிலி :

### - கொசுவே!

கொசு விரட்டும் சாதனங்கள் மட்டும் ஆயிரம் வந்து விட்டன. இன்னும் குறட்டைக்குக் கண்டுபிடித்தபாடில்லை

என்று எதிர் அணிக்காரரே ஒப்புக் கொள்கிறார். ஐயா, எதை முதலில் விரட்டுவோம்? எது அதிகமாகத் தொல்லை தருகிறதோ, எதனால் அதிகம் பாதிக்கப்படுகிறோமோ அதற்குத் தானே அய்யா முதலில் மாற்று கண்டுபிடிப்போம்? அதனால்தான் கொசுவை விரட்டும் சாதனங்கள் ஏராளமாக வந்து விட்டன. குறட்டை பாவம், மிக சாது... அது அவ்வளவாகத் தூக்கத்தைக் கெடுக்கவில்லை என்றுதான் அதற்கு மட்டும் சலுகை தந்திருக்கிறார்கள்.

அந்த பாரதியார் காலத்திலென்ன, அதற்கு முன் கம்பர், மற்றும் ராமாயண காலத்திலும் கொசுக்கள் இருந்திருக்க வாய்ப்பில்லை என்று உறுதியாகக் கூறுகிறேன். ஏனென்றால் ராமாயண காலத்தில் கொசுத் தொல்லை இருந்திருந்தால் கும்பகர்ணன் ஆறு மாதம் எப்படித் தூங்கியிருப்பான் என்று சற்று யோசித்துப் பாருங்கள். அதே சமயம் அவன் விட்ட குறட்டையாலும் யார் தூக்கமும் பாதிக்கப்பட்டதாக கம்பராமாயணத்தில் எங்கும் கூறப்படவில்லை. ஆகவே தூக்கத்தைக் கெடுப்பதில் கொசுவிற்கே ஆற்றல் அதிகமென்று நான் அழுத்தமாகக் கூறுகிறேன்.

### தூங்கி வழியன்பன்

### - குறட்டையே!

புராண காலத்தில் கொசுக்கள் இல்லை என்று ஒப்புக் கொண்டவர்களுக்கு அந்தக் காலத்திலிருந்தே இருக்கும் குறட்டைக்கு ஒரு விரட்டி ஏன் யாராலும் கண்டு பிடிக்க முடியவில்லை எனக் கூற முடியவில்லை. கம்ப்யூட்டர் ஆளும் இக் காலத்திலும் குறட்டையைக் கொண்டு மின்சாரம் தயாரிக்க முயல்கிறார்களே தவிர அதை விரட்ட யாரும் துணியவில்லை. மின்சார சக்திக்கே பயன்படுத்தப்படும் குறட்டையை விடவா கொசுவுக்கு சக்தி? இன்னும் சொல்லப் போனால் குறட்டை ஏற்படுத்தும் ஒலி அலைகளால் கொசுவையே விரட்டி விடலாமென்று கண்டுபிடித்து விட்டார்கள். ஆகவே குறட்டைக்கே வலு அதிகம் என்று கூறி என் அரட்டையை முடித்துக் கொள்கிறேன். மேலும் 'குயில் கூவித் துயில் எழுப்ப' என்று ஏதாவது கூவினால்தான் துயிலெழ முடியும் என்று பாடினார் கவியன்றி 'கொசுக் கடித்துத் துயில் எழுப்ப' என்று பாடவில்லையே!

புலவர் 'சொக்கி' கொசுவே என்று வாதிட 'மைக்' பக்கம் வரும் போது ஏதோ 'கொர்... கொர்' என்று சப்தம் வர, எல்லோரும் டீ.வி.காமிரா உட்பட அந்த திசை நோக்கித் திரும்ப, நடுவர் துஞ்சாநாதன் தன் நாற்காலியில் அமர்ந்தபடி குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருக்க, காமிரா அதைக் காண்பிக்க விரும்பாமல் 'டக்'கென நகர, திரையில் நடிகர்களுக்கு வருந்துகிறார்கள்!

---

"தலைவர் ஏன் பணமுடிப்பை, வேண்டாம்'னு ஓடறார்?"

"யாரோ முடிப்புக்குள்ள குண்டு இருக்குறதா புரளியை கிளப்பி விட்டுட்டாங்க!"

- தஞ்சைத் தரணியன்.



"அதோ கார்ல போறாரே, அவர் ஒரு மாதிரியான ஆளா இருப்பார்னு தோணுது."

"எப்படி?"

"காருக்குப் பின் பக்கம், 'சேமிப்பு வீட்டைக் காக்கும்; சிறுசேமிப்பு சின்ன வீட்டைக் காக்கும்'னு எழுதி வச்சிருக்காரே!"

- சீர்காழி வி. ரேவதி.



"உங்க தொகுதி எம்.எல். ஏ. வோட கட்-அவுட்டை அவரே வைக்க ஏற்பாடு பண்ணினாரா, ஏன்?"

"தொகுதிப் பக்கமே தலை காட்டாத தாலே உங்க முகமே மறந்து போச்சு'னு சொன்னேன். அதான்!"

- எஸ். முகம்மது யூசுப்.



**அவன் மார்பில் அதிவேகமாகப் பாய்ந்தது ஒரு குறுவாள். கூக்குரல் எழுப்பவும் அவகாச மின்றி அந்தக் குறு வாள் இதயத்தை ஊடுருவி விட்டதால் தடுமாறிய மாடத்தேவன் மணலில் சரிந்து விழுந்தான்.**

# பாண்டியன் மகள்

## 36. இரவில் விழுந்த கொலை, இளவல் விரித்த வலை!

"சங்கறுப்பதெங்கள் குலம்" என்று பாடிய நக்கீரர் பிறந்த கொற்கைப் பரதவர் குலத்துக்கு, புராண காலந்தொட்டே நீண்ட புகழ்மிக்க வரலாறு உண்டு. அந்தக் குலத் தில் தோன்றிய கவிஞர்களும் கலைஞர் களும் வீரர்களும் மாலுமிகளும் தளபதி களும் எத்தனையெத்தனையோ. சிறு வயது முதலே கடலோடுவதும், மூச்சடக்கி முத்தெ டுப்பதும் ஜீவனத்திற்கு வழியாகக் கொண்ட அந்த பரதவருக்கு நீலக்கடலே விளை யாட்டுத் திடலாகவுமிருந்தது.

அந்தக் குலத்தில் பிறந்த மாடத்தேவ னுக்குத் தன் பரம்பரைத் தொழிலை விட வீர விளையாட்டுக்களில்தான் ஆர்வம் அதிக மாக இருந்தது. சிலம்பத்திலும், வாட்போரி லும், குறுவாள் எறிவதிலும் அந்தக் கடற் கரைப் பகுதியில் இணையற்றவனாக விளங் கியவன், மாறவர்மன் கண்களில் பட்ட நாள் முதல் அவன் மெய்க் காவலனாக மாறி னான். தனக்கு வாழ்வளித்த மாறவர்மனைத் தெய்வமாகவே மதித்தான் மாடத்தேவன்.

மந்திராலோசனைக்கு இரண்டு தினங்கள் முன்பாக வந்து சேர்ந்த அந்த சேரநாட்டுப் பிரபு சமுத்திரபந்தனின் நடையும், உயரமான தோற்றமும், கூர் மையான விழிகளும் மாடத் தேவ னுக்கு விவரிக்க இயலாத ஒரு சந்தே கத்தைக் கிளப்பியிருந்தன. அந்த அலட்சிய நடையையும் கூரிய பார் வையையும் கண்டவன், அவற்றை இதற்கு முன்பு எங்கோ சந்தித் திருப்பதாக ஓர் எண்ணம் கொண் டிருந்தான். வயதேறிய அவன் முக மும், மாறவர்மரும் மார்த்தாண் டரும் ஏன், சுழத்து இளவலும் கூட சமுத்திரபந்தனுடன் பேசிப் பழகிய முறையும், காட்டிய மரி யாதையும் அவன் சந்தேகத்தை உடைக்க முயன்றன. ஆயினும் அவன் மனத்தில் எழுந்த ஐயம் மட்டும் தீர்ந்தபாடில்லை.

இரவின் முதல் ஜாமத்தில் சமுத்திர பந்தன் வெளியேறியதும் அவனைத் தொடர்ந்த மாடத்தேவன், அவன் பரதவர் இல்லங்களை நோக்கி நடப்பதைக் கண்ட தும் குறுக்கு வழியில் குடிசைகளினூடே நடந்து முன்னதாக வந்து அவன் வரும் வழி யில் காத்திருந்தான்.



சமுத்திரபந்தனைச் சந்திக்க மறைவிலிருந்து வெளிவந்தவனைக் கண்டதும் அவன் சந்தேக வலை பட்டென்று அறுந்தது. சோழர் படையின் பிரதான ஒற்றன் ஜெயந்தனை முன்னமே நன்றாக அறிந்திருந்தான் மாடத்தேவன். அப்படியானால் சமுத்திரபந்தனாக இருப்பது மேலைமங்கலத்தில் தன்னந்தனியனாக வந்து, தங்களையும் மாறவர்மரையும் தாக்கி, இளவரசியைச் சிறை மீட்ட அந்த உயரமான வாலிபன்தான்! நரை விழுந்த குழல்கள் கண்களை ஏமாற்றினாலும் அந்தக் கூரிய பார்வையும் நீண்ட உறுதியான கரங்களும், தான் காயங்களுடன் விழுந்து கிடந்த போது கவனித்திருந்தவை தாம்.



அவன் மனத்தில் கலவரமும் ஆத்திரமும் பொங்கியது. மாறவர்மருக்கு எத்தனை பெரிய துரோகம்? இவனை இனி உயிருடன் விடக் கூடாது என்று தீர்மானித்தவன், தான் குரல் கொடுத்தால் துணைக்கு ஓடி வரத் தன் ஆட்கள் நிறைந்திருக்கும் அந்தக் கடற்கரைப் பகுதி பெரும் துணிவைத் தரவே, இருப்பிடத்தை விட்டு கையில் குறுவாள் ஒன்றுடன் சமுத்திரபந்தனை வழி மறித்தான்.

இதற்குள் ஓலைக் குழலைப் பெற்ற ஜெயந்தன் திரும்பி நடந்து மறைந்து விட்டிருந்தான்.

ஒரு வினாடி திகைத்த சமுத்திரபந்தன் மிக சகஜமாகவும் சாதாரணமாகவும் வினவினான் :

''நீ மாறவர்மரின் மெய்க் காவலனாயிற்றே? ஏனப்பா என்னை வழி மறிக்கிறாய்? எனிக்குக் குறுவாள்?''

''நீ மேலைமங்கலத்தில் எங்களையும் மாறவர்மரையும் தாக்கியவன்தானே?'' மாடத்தேவன் குரலில் ஆத்திரம் பொங்கியது.

சமுத்திரபந்தன் விழித்தான். ''மேலைமங்கலமா? மாறவர்மரைத் தாக்கினேனா?''

ஒரு வினாடி தன் மீதே சந்தேகம் வந்தது மாடத்தேவனுக்கு. அதை ஒதுக்கி, ''என்னை ஏய்க்க நினைக்காதே. நீ ஜெயந்தனுடன் பேசியதையும் ஓலையொன்றைக் கொடுத்ததையும் நான் கண்டேன்'' என்றான்.

''இந்தப் பக்கமாகச் சென்றவனா? யாரவன் ஜெயந்தன்? வா, நாமிருவருமே சென்று தேடுவோம்'' என்ற சமுத்திரபந்தன் மாடத்தேவனை விலக்கி, வெகு நிதானமாக இருவில் நடக்க ஆரம்பித்தான்.

சமுத்திரபந்தனுக்கு முன்னால் தாவிய மாடத்தேவன், கையில் பிடித்த குறுவாளுடன் இருளை ஊடுருவியபடி மணலில் நடந்தான். சற்று தூரம் வந்ததும் அமைதி நிலவிய அந்தப் பகுதியில் மணற்பரப்பும் அலைகளும் தவிர, ஒன்றிரண்டு கட்டுமரங்கள் மட்டுமே இருந்தன. மாடத்தேவன் ஓடிச் சென்று அவற்றினிடையே குனிந்து தேட ஆரம்பித்தான். அவன் மார்பில் அதிவேகமாகப் பாய்ந்தது ஒரு குறுவாள். கூக்குரல் எழுப்பவும் அவகாசமின்றி அந்தக் குறுவாள் இதயத்தை ஊடுருவி விட்டதால் தடுமாறிய மாடத்தேவன் மணலில் சரிந்து விழுந்தான்.

கட்டு மரங்களினிடையிலிருந்து உடையைச் சரிப்படுத்திக் கொண்டு எழுந்த ஜெயந்தன் சமுத்திரபந்தனை நெருங்கினான்.

''பிரபு, நீங்கள் அரண்மனைக்குத் திரும்புங்கள். இவனை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்றான்.

''எச்சரிக்கையாயிரு ஜெயந்தா'' என்ற சமுத்திரபந்தன், திரும்பி நடந்து இருளில் மறைந்தான்.

தனித்து மணற்பரப்பில் நின்ற ஜெயந்தன், சற்று நேரம் சிந்தித்தான். பின் குனிந்து மாடத்தேவனின் கால்களைப் பற்றித் தரதரவென்று இழுக்க ஆரம்பித்தவன், தூரத்தில் பரதவர் இருவர், கைகளில் கள் நிரம்பிய கலயங்களுடன் தள்ளாடியபடியே கட்டு மரங்களை நோக்கி வருவதைக் கண்டு சற்று நின்றான். இன்னும் சற்றுத் தள்ளி இரவுக் காவலரும் வந்து கொண்டிருப்பதைக் கண்டான்.

இனி தாமதிப்பது பெரும் ஆபத்து என்பது புரிந்ததால் மாடத்தேவனை அப்படியே விட்ட ஜெயந்தன், எதிர்ப்புறமாக நடந்து இருளில் மறைந்தான்.

கொற்கை அரண்மனையில் தென்மேற்கு மூலையில் அமைந்திருந்த அந்த அறை, துறைமுக வாயிலில் பிரும்மாண்டமாக எழுந்து நின்ற யந்திரத் தூண்களின் நேர் எதிரே இருந்தது. அந்தத் தூண்களை அமைத்துக் கொடுத்த யவனப் பொறியாளர்களை வியந்தபடி நின்றிருந்த குலசேகரன் பஞ்சணையிலமர்ந்து தன்னை உற்றுநோக்கிக் கொண்டிருந்த பராக்கிரமபாகுவை நோக்கி, ''ஈழத்திளவரசே, அந்தத் தூண்கள் ஒரே சமயத்தில் நான்கு கலங்களை அழிக்கவல்லது என்றா கூறுகிறீர்கள்?'' என்றான்.

''ஆம் குலசேகரா! ஆனால் அவை சரியான சமயத்தில் இயங்காமல் நின்றுவிடும்'' என்றவன் குரலைப் பெரிதும் தாழ்த்திக் கொண்டான்.

''குலசேகரா, போர் தொடங்கியதும் களத்தில் பறக்கும் வேல்களில் ஒன்று மாறவர்மனை மாய்த்து விடும். பாண்டியர் உடனடியாக ஒரு மன்னனைத் தேட வேண்டியிருக்கும். உன் பழமையான வம்சம் உனக்கு அந்த வாய்ப்பை அளிக்கும். நானும் உன் பெயரை முன்மொழிவேன். மறுத்தால் என் படை போரிலிருந்து விலகி விடும் என்றும் கூறுவேன். மாறவர்மன் இல்லாத நிலையும், தொடங்கி விட்ட போரும் என் முடிவையே அவர்களும் ஏற்கும்படிச் செய்யும்.''

குலசேகரன் அடித்து வைத்த சிலையாக அமர்ந்திருந்தான்.

''குலசேகரா, போர் முடியும் வரை நீ இந்தக் கோட்டையை விட்டு அசைய வேண்டாம். அதோ நிற்கும் கலங்களில் இரண்டாவதில் அஞ்சனா உனக்காகக் காத்திருக்கிறாள். போர் தொடங்கியதும் அவளைக் கோட்டைக்கு அழைத்து வந்து விடு. என் வீரர்களும் உங்களுக்குக் காவலாக வருவார்கள். மதுரை அரியணையில் நீயும் அஞ்சனாவும் அமரும் வரையிலும், ஏன் அதற்குப் பின்னரும் ஈழத்தின் பலமான கரங்கள் உங்களைக் காத்து நிற்கும்'' என்றான் பராக்கிரமபாகு.

அஞ்சனாதேவி அருகிலிருக்கிறாள் என்ற நினைப்பும் பராக்கிரமபாகுவின் வார்த்தைகளும் குலசேகரனைக் கனவுலகில் மிதக்கச் செய்தன. அதைப் புரிந்து கொண்ட பராக்கிரமபாகு, ''நான் சென்று கலங்களைக் கவனித்து விட்டுக் காலையில் வருகிறேன்'' என்று விடைபெற்றுக் கொண்டான்.

அரண்மனையை விட்டு வெளியே வந்த பராக்கிரமபாகு வானத்தை நோக்கினான். இரண்டாவது ஜாமம் தொடங்கியிருந்தது. விண்மீன்களை மறைத்து மறைத்து மேகத் தீற்றல்கள் ஊர்ந்து கொண்டிருந்தன.

கடற்கரையை நோக்கிச் செல்லும் பாதையில் இரண்டடி எடுத்து வைத்தவன்

"அந்த ஆபீஸ் மானேஜர் ஆனாலும் ரொம்ப மோசம் போங்க!"
"ஏன் அப்படிச் சொல்றீங்க?"
"காலங்கார்த்தால முதல் கேஸா வந்திருக்கீங்க, ஏதாவது கொடுத்துட்டுப் போங்கன்னு கேட்டாரே!"

- சீர்காழி வி. ரேவதி



"ஐம்பது
ரூபாய்க்குமேல்
லஞ்சம் குடுக்கறவங்க
ளுக்கு தம்ளரில்
ஏதோ குடுக்கறாங்களே,
என்னது?"
"இளநீர்தான், வயிறு
எரியாமலிருக்கறதுக்காம்!"
- வேதபுரி
எஸ். ரமேஷ்



சட்டென்று நின்றான். சமுத்திரபந்தன் வந்து கொண்டிருந்தான். வழக்கமான அவனது நிதான நடையில் சற்று வேகம் கூடியிருப்பதாகப்பட்டது. அவனது அலட்சிய நடையையும், கூர்மையாகப் பளிச்சிட்ட விழிகளையும், பக்கவாட்டில் நீண்டு தொங்கிய உறுதியான கரங்களையும் கவனித்த பராக்கிரமபாகு, இவன் சேர நாட்டிலிருந்து வந்த பிரபுவா, அல்லது அந்நாட்டு ஒற்றனா, அல்லது இரண்டுமே இல்லையா என்று எண்ணினான்.

நெருங்கி வந்த சமுத்திரபந்தனை "இந்த வேளையில் எங்கு சென்று வருகிறீர்கள்?" என்று கேட்டான் பராக்கிரமபாகு.

பதில் சர்வசாதாரணமாக வந்தது : "உறக்கம் வரவில்லை. சற்று நேரம் கடற்கரையில் உலவி விட்டு வருகிறேன்."

"உறக்கம் வரவில்லையெனில் என்னுடன் கலத்திற்கு வருகிறீர்களா?"

"அவசியம் வருகிறேன். எனக்கும் ஈழத்துக் கலங்களைக் காண வேண்டும் என்ற எண்ணம் நீண்ட நாட்களாக உண்டு."

பராக்கிரமபாகுவின் மனத்தில் அவநம்பிக்கை ஏதும் தோன்றியிருந்தால் சமுத்திரபந்தனின் இந்த சகஜமான பதில் அதைத் துடைத்து விட்டது. ஏறக்குறைய ஒரே உயரமும் ஆகிருதியும் கொண்ட இருவரும் கடற்கரையை நோக்கி நடந்தனர்.

பரதவர் குடியிருப்பைத் தாண்டியதும் சற்றுத் தொலைவில் நான்கைந்து பரதவர் கும்பலாக நிற்பதைக் கண்ட பராக்கிரமபாகு, அருகில் நெருங்கியதும் கீழே ஒருவன் மார்பில் பாய்ந்த குறுவாளுடன் விழுந்து கிடப்பதைக் கண்டான். அவன் பார்வை சமுத்திரபந்தனை நோக்கித் திரும்பியது.

சமுத்திரபந்தனது முகம் கல்லாயிருந்தது. பரதவர் வருவதைக் கண்டு ஜெயந்தன் மாடத்தேவனை அப்படியே விட்டுச் சென்றிருக்க வேண்டும் என யூகித்துக் கொண்டவன், கீழே கிடந்தவனை உற்று நோக்கியபடியே, "இவன் மாறவர்மரின் மெய்க்காவலன் என்று நினைக்கிறேன். அவருடன் இவனை இரண்டொருமுறை கண்டிருக்கிறேன்" என்றான்.

அருகில் நின்ற பரதவன், "பிரபு, இவன் பாண்டியர் படையில் சேர்ந்து நீண்ட நாட்களுக்குப் பின் இங்கு வந்திருக்கிறான். இங்கே பழைய பகைவர் யாரும் இவனுக்கு இருக்கிறார்களா என்பது தெரியவில்லை. ஆனால் எங்களிடம் "சமுத்திரபந்தன்" என்று தொடங்கி ஏதோ கூற வந்தான். அதற்குள் உயிர் பிரிந்து விட்டது" என்றான்.

பராக்கிரமபாகுவின் கூரிய விழிகள் சமுத்திரபந்தனை நோக்கின.

சமுத்திரபந்தன் முகத்தில் வியப்பு படர்ந்திருந்தது. சற்று சிந்தித்தவன், "நான் சற்று முன்புதான் இங்கு உலவி விட்டுத் திரும்பினேன். என்னை இவன் பார்த்திருக்க வேண்டும். தனக்கு நேர்ந்த ஆபத்தை என்னிடம் தெரிவிக்க முயன்றிருக்கிறான் போலும்" என்றான்.

ஏதோ சிக்கலான ஒரு வடமொழி பதத்திற்கு விளக்கம் கூறுவது போல் இறந்தவனது வார்த்தைக்கு நிதானமாக விளக்கம் கூறிய சமுத்திரபந்தனை நோக்கிய பராக்கிரமபாகுவின் விழிகளில் வியப்பு பரவியது. அரண்மனை வாயிலில் சந்தித்தபோதே கடற்கரையில் உலவி விட்டு வந்ததாக அவன் கூறியதும், மாடத்தேவனது வார்த்தைகளுக்குத் தந்த விளக்கமும் எவ்வித சந்தேகத்துக்கும் இடமின்றிச் செய்தாலும் பராக்கிரமபாகுவின் கூரிய அறிவு இதில் ஏதோ சூது இருக்கிறது என்று கூறிக் கொண்டிருந்தது. மெய்க்காவலன் கொல்லப்பட்டதையும், ஏறத்தாழ அச்சமயம் தாங்கள் அங்கிருந்ததையும் அறிந்தால் மாறவர்மன் பல புதிய குழப்பங்களை ஏற்படுத்துவான் என்ற எண்ணமும் தோன்றியது அவனுக்கு-

பரதவரை நோக்கிய பராக்கிரமபாகு, "இவனை அதோ தெரியும் மணல்மேட்டில் புதைத்து விடுங்கள். இதைப் பற்றி எவரிடமாவது மூச்க விட்டால் நீங்கள்தான் இவனைக் கள்வெறியில் கொன்று விட்டதாகக் கூறி உங்களைத் தண்டிப்பேன்" என்றான். அவன் வார்த்தைகளால் மிரண்டு போன பரதவர் அவசரமாக மாடத்தேவன் உடலை எடுத்துக் கொண்டு நகர்ந்தனர்.

ஏற்கெனவே ஜெயந்தனால் இழுக்கப்பட்டதாலும், உயிர் பிரியுமுன் மாடத்தேவன் புரண்டதாலும், பரதவர் அவசரமாகத் தூக்கியதாலும் அந்த உடலில் பாய்ந்திருந்த குறுவாள் நெகிழ்ந்து மணலில் விழுந்தது.

பரதவர் செல்வதைப் பார்த்துக் கொண்டு நின்ற பராக்கிரமபாகு குனிந்து அந்தக் குறுவாளை எடுத்தான். அதன் குறுகிய பிடியும் நீண்ட கூரிய முனையும் சோழ வீரர்கள் கையாளும் குறுவாட்களை நினைவுபடுத்தவே, அவன் விழிகள் சமுத்திரபந்தனின் கச்சையை நோக்கின.

அதே வடிவத்தில் அமைந்த குறுவாளொன்று அங்கே பரமசாதுவாக அமர்ந்திருந்தது.

கையிலிருந்த குறுவாளைக் கடலை நோக்கி நெடுந்தூரம் வீசிய பராக்கிரமபாகு, "வாருங்கள் போகலாம்" என்று அழைத்தபடி துறையை நோக்கி நடந்தாலும் அவன் சித்தத்தில் எழுந்த அலைகள் கரையில் மோதிய அலைகளை விட அதிகமாக இருந்தன. "இவன் வேங்கிச் சிறையிலிருந்து சோழர் உடையில் தப்பி வந்ததாகக் கூறியிருக்கிறான். எனவே இவனிடம் குறுவாளிருப்பதன் காரணத்தை ஒப்புக் கொள்ள இயலும். இவன் மாறவர்மனின் மெய்க்காவலனைக் கொல்ல என்ன அவசியம் நேர்ந்திருக்க முடியும்? இவனைப் பற்றிய ரகசியமேதும் அவனுக்குத் தெரிந்து விட்டதால் கொன்றிருப்பானோ? அப்படியானாலும் இவன் கச்சையில் குறுவாள் அப்படியே இருக்கிறதே! அல்லது இவனைச் சேர்ந்தவன் யாராவது இவனைச் சந்திக்க.." பராக்கிரமபாகுவின் சிந்தனையை சமுத்திரபந்தனின் குரல் தேக்கியது.

"சமுத்திரனவல் ஏன் மௌனமாகி விட்டார்? நீங்கள் கலகலப்பாகப் பேசக்கூடியவர் என்பதால்தான் உங்களுடன்* வர ஒப்புக் கொண்டேன். என்னை ஏதோ எதிரியின் ஒற்றனைப் போல அழைத்துச் செல்கிறீர்களே!"



''அப்படியேதும் தவறாக நினைக்க வேண்டாம்'' என்று மறுத்த பராக்கிரம பாகு, தொடர்ந்து போரைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டாலும் அவன் புத்தி வேறு விதமாக இயங்கிக் கொண்டிருந்தது. இவன் மாறவர்மனின் மெய்க்காவலன் இறந்து கிடந்ததைப் பார்த்த போதும், உடல் அப்பு றப்படுத்தப்படுவதைக் கண்ட போதும் பதற்றமடையவில்லை; மாறவர்மரிடம் தெரிவிக்க வேண்டுமென்று கூறவுமில்லை. இவன் ஏதோ ஒருவிதத்தில் கொலையில் சம் பந்தபட்டிருக்க வேண்டும். மெய்க்காவல னின் கொலைக்கு உடந்தையாயிருப்பவன், ஏன் மாறவர்மனையே கொல்லும் தன் திட்டத்திற்கு ஒப்புக் கொள்ளக் கூடாது? இது பற்றி இவனிடம் ஆழம் பார்க்க வேண் டும். ஒன்று, இவன் சம்பந்தமற்ற விஷயங் களில் தலையிடாத சேர ஒற்றனாக இருக்க வேண்டும்; அல்லது பரம அயோக்கியனாக இருக்க வேண்டும் என்ற தீர்மானத்திற்கு வந்தான் பராக்கிரமபாகு.

துறையிலிருந்து இருவரையும் ஏற்றிக் கொண்ட படகு கலத்தை நெருங்கியது. அந்தப் பெரும் போர்க்கலத்தையும், ஸர்ப் பம் போல் விரிந்த முகப்பையும் கண்ட சமுத்திரபந்தனது முகத்தில் வியப்பு படர்ந் தது. ஆனால் அந்த வியப்பும் பிரமிப்பும் உண்மையா அல்லது நடிப்பா என்ற சந்தே கம் எழுந்தது பராக்கிரமபாகுவுக்கு. அவன் எண்ணத்தை சமுத்திரபந்தனின் அடுத்த கேள்வி உறுதிப்படுத்தியது.

''இளவரசே, ஸர்ப்பமந்திரத்தில் இத்தனை உயரத்தில் துடுப்புகள் அமைப் பது வழக்கமில்லையே?'' என்றான் சமுத் திரபந்தன்.

'இவன் சாதாரண ஒற்றனல்ல' என்ற எண்ணம் மீண்டும் எழுந்தது பராக்கிரம பாகுவின் உள்ளத்தில்.

''எங்கள் கடல் பகுதி அதிக ஆழமற்றது சமுத்திரபந்தரே. அலைகளின் வீச்சை சமா ளிக்கவும், ஆழமான பகுதியை விரைந்து அடையவும் துடுப்புகள் சற்று உயரத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன.''

மேலிருந்து வீரர்கள் வீசிய நூலேணி யில் வெகுநாள் பழகியவனைப் போல் ஏறிய சமுத்திரபந்தன், தளத்தை அடைந்த தும் உண்மையிலேயே பிரமித்தான்.

தளத்தில் இருவரையும் வரவேற்க மனத்தைக் கொள்ளை கொள்ளும் புன்னகை யுடன் ஒயிலாக நின்றிருந்தாள் அஞ்சனா தேவி.

(தொடரும்)

# அஞ்சு சானல் பார்க்கணும்னு யாருக்குத் தலையெழுத்து?




நோ டமில்..

ஜெய் ஹிந்தி

அஞ்சும் ஹிந்தி..

மக்கள் சேவைக்கு
மத்திய அரசாங்கம்
வக்கணையாத் தோற்றுவித்த
விளக்கெண்ணெய் விஷயங்க!

பொழுது போக்க உட்காரும்
பொதுஜனக் கூட்டத்தை
அழுது அழுது அலறவைக்கும்
அராஜகக் கும்பலுங்க.

ஆரம்ப காலத்துல
அழகா ஒரு சேனல்;
அறுவையோ ரம்பமோ -
அத்தோட போச்சுங்க.

பொறுக்காதே, அவங்களுக்கு!
புதுசா இன்னொண்ணு!
உருப்படியா ஒண்ணுமில்லை
உயிரெடுக்க வேறு முறை!

மெட்ரோன்னு சொன்னாங்க.
சரிதான், பார்க்கலான்னா,
'வெட்றா கழுத்தை'ன்னு
விரட்டாத குறைதாங்க!

போதாத குறைக்குப்
பொழுதானாப் போதுங்க,
காரா சேவாட்டம்
கடமுடன்னு இந்திங்க!

ஆகஸ்ட் பதினஞ்சு
சுதந்திர தினமாங்க?
அஞ்சு சேனல் ஆரம்பிச்சி
ஆயுள் சிறை தந்தாங்க!

அத்தனையும் இந்திங்க!
அத்தனையும் இந்திங்க!
அக்கிரமம் வேற
எங்கனா நடக்குமாங்க?









ஆயுள் சிறை!







தாத்தா காலத்துத்
திறப்பு விழாவெல்லாம்
பேரன் பாக்கணும்னு
பெரிசா தலையெழுத்தா?




உள்ளூரு கில்லி, கோலி
கபடி கெட்டுதுங்க;
உருப்படாத ஆட்டத்துக்கு
ஒரு சானல் ஒதுக்கறாங்க!



பாட்டுச் சானலிலே
பல்லு போன கிழவியெல்லாம்
பாட்டா பாடுதுங்க?
பழிவாங்கறானுங்க!




பஞ்சப்பாட்டு பாடுறவன்
பசி தீர்க்கத் துப்பு இல்லை
அஞ்சு சேனல் பாக்கணும்னு
யாருக்குத் தலையெழுத்து?

என்ன சொல்லி என்னங்க?
யார் கேக்கப் போறாங்க?
கண்றாவி நிகழ்ச்சியைத்தான்
கட்டிக்கிட்டு அழுவாங்க!




மெரீனா பீச்சாண்ட
மெயின் ரோடு நடுவால
ஒரு நாளாச்சும் நாம்
உண்ணாவிரதம் இருப்போங்க.




'அம்மா இருந்ததுக்கே
ஆனகதை ஒண்ணுமில்லை.
சும்மா இருய்யா'ன்னு
சொல்லாம சொல்லிங்க!



சரிதான் அதுவுமுங்க!
எட்டுமணி ஆயிடிச்சா?
பிரியாப் பொண்ணு வரும்.
பிறகு வாங்க, பேசிக்கலாம்!

- குரோம்பேட்டைக் கவிராயர்






# அஸ்வினி மஸில் ஆயில்

## மூட்டு வலி, சுளுக்கு மற்றும் இதர வலிகளிலிருந்து உடனடி நிவாரணம் அளிக்கிறது.






### உபயோகிப்பவர்களின் அபிப்பிராயம் :

"இப்போது எனக்கு 62 வயது. கடந்த 10 ஆண்டுகளாக மூட்டுவலியால் அவதிப்படுகிறேன். பல மருந்துகளை உபயோகித்துப் பார்த்தும் பலன் அளிக்கவில்லை; வலியும் தணியவில்லை. மார்க்கெட்டில் "அஸ்வினி மஸில் ஆயில்" வந்திருப்பதைக் கண்டதும், அதை வாங்கி தவறாமல் உபயோகித்து வருகிறேன். இப்போது மூட்டுவலி பெருமளவில் குறைந்துள்ளது. இன்னும் சில நாட்கள் தொடர்ந்து உபயோகித்தால், வலி நீங்கி பூரண குணம் ஏற்படும் என்று நம்புகிறேன். அஸ்வினி மஸில் ஆயில் தயாரிப்பாளர்களுக்கு என் மனமார்ந்த நன்றி".

**கோகா ஜெகன்மோகன் ராவ்,** அட்வகேட் & நோட்டரி,
மாருதி மந்திர் காம்ப்ளெக்ஸ், இல்லக்குந்த், ஐதராபாத்.

பாக்கிங் மற்றும் தபால் செலவுகள் உட்பட ரூ.30/- ஐ D/D மூலம் நேரடியாக அனுப்பி வைத்தால் மூன்று 25 ml. மஸில் ஆயில் பாட்டில்கள் அனுப்பி வைக்கப்படும்.

தயாரிப்பாளர்கள்:

**அஸ்வினி ஹோமியோ பார்மஸி**
மூசாபேட், ஹைதராபாத் 500 018

*அஸ்வினி ஹோமியோ ஹேர் ஆயில் தயாரிப்பாளர்களின் மற்றுமோர் தயாரிப்பு*

**இல்லந்தோறும் இருக்கவேண்டிய வலி நிவாரணி**



"அந்தக் கட்சியில மட்டும் சில சலுகைகள் தர்றதா அறிவிச்சிருக்காங்க." '

'என்னன்னு?"

"மூணு தடவை கால்ல விழுந்தா ஒரு தடவை தூக்கி விடப்படுமாம்!"

- பவானி லயன்

"இருந்தாலும் பக்கத்து வீட்டுக்காரிக்கு ரொம்பத் திமிருங்க!"

"ஏண்டி...?"

"நேத்து அவ வீட்டுக்கு முகமூடிக் கொள்ளைக்காரங்க வந்துட்டுப் போனதை ரொம்பப் பெருமையா பீத்திக்கறாங்க!"

- தஞ்சைத் தரணியன்





"ஏதாவது சத்தம் கேட்கும்போதெல்லாம் திருடனான்னு பாருங்க'ன்னு என்னை எழுப்பி விட்டுடுவா என் மனைவி."

"திருடர்கள் சப்தம் போடாமல்தான் வருவாங்க'ன்னு சொல்ல வேண்டியதுதானே...?"

"அப்படித்தான் சொன்னேன். பிறகு சப்தம் இல்லாதப்போவெல்லாம் எழுப்பி 'போய் பார்த்துட்டு வாங்க'ன்னு சொல்ல ஆரம்பிச்சுட்டா."

- எம். அசோக்ராஜா



"ஏங்க இளைச்சுட்டீங்க?"

"கவலைதான்!"

"உங்களுக்குத்தான் குடும்பமே இல்லை. துறவியாச்சே! என்ன கவலை?"

"குடும்பமே இல்லையேங்கற கவலைதான்!"

- எஸ். விஜயா சீனிவாசன்



"தரகர் விவரமான ஆளாக இருப்பார் போலிருக்குது..."

"எப்படிச் சொல்றீங்க?"

"பொண்ணு, மாப்பிள்ளையோட போட்டோவைப் பார்க்கணும்னு கேட்டதுக்கு, மாப்பிள்ளை சமையற்கட்டுல காய்கறி அரியற மாதிரி போட்டோவைக் கொண்டு வந்து காண்பிக்கிறாரு...!"

- மோகன் ராஜ்

புத்தக உலகம் கண்டிராத புதுமை!
இலவசம்! ஒன்று வாங்கினால் மற்றொன்று இலவசம்!!
ஆங்கிலம் கற்க இவை போதும்!

**'ஆங்கிலப் பேராசான்'** வாங்குவோர்க்கு **'வர்த்தமானன் இங்கிலீஷ் ஸ்பீகிங் கோர்ஸ்' இலவசம்!**

பிரிட்டிஷ் சிங்கத்தை அதன் குகையிலேயே தாக்குகிறார்!

(இந்திய நாடு விடுதலை பெற்ற பின், லண்டனில் நடைபெற்ற காமன்வெல்த் மாநாட்டில் பாரதப் பிரதமர் பண்டித நேரு பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கடுமையாகத் தாக்கிப் பேசியபோது 'தினமணி' இட்ட தலைப்பு இது)

எது கொண்டு தாக்கினார் நேரு? ஆங்கிலம் கொண்டு! ஆமாம். நாமும் ஆங்கிலம் கற்றால் அறிவுலகத்தை அடக்கி ஆளலாம்! 'ஆங்கிலம் கற்றே தீருவேன்' என்ற அணையா ஆர்வம் (burning desire) உங்களிடத்தில் இருந்தால் போதும்! காந்தி போல எழுதலாம்; நேரு போலப் பேசலாம்; அண்ணா போல முழக்கம் செய்யலாம்! ஒரு நாளைக்கு இவ்வளவு நேரம் என்ற கால வரையறை இல்லை! நேரம் கிடைக்கும் போதெல்லாம் - வயலில் வாய்க்காலில் - வரப்பில் - களத்து மேட்டில் - பஸ்ஸில் - ரயிலில் எங்கெங்கே வாய்ப்பு உண்டோ அங்கங்கே படியுங்கள்!

இதை வாங்கலாமா? அதை வாங்கலாமா? இங்கே சேரலாமா? அங்கே சேரலாமா? என ஊசலாடாதீர். ஆங்கிலம் கற்க - தடையின்றிப் பேச - பிழையின்றி எழுத இவை போதும்!

எல்லா இலக்கணக் கூறுபாடுகளையும் விளக்குகிறது எமது **ஆங்கிலப் பேராசான்** (810 பக்கம் விலை ரூ.75/-)

சரியான உச்சரிப்புடன் விளங்குகிறது எமது மற்றொரு நூலான **வர்த்தமானன் இங்கிலீஷ் ஸ்பீகிங் கோர்ஸ்** (600 பக்கம் ரூ.55/-)

**இம் மாதத்திற்கு மட்டும் இந்தச் சலுகை உண்டு!**

ரூ.75 மட்டும் அனுப்புக! உடனே இருநூல்களையும் V.P.P யில் அனுப்பி வைக்கிறோம். தபால் செலவை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக!



கற்களைக் கொண்டு சுவர் எழுப்புதல் போல, சொற்களைக் கொண்டு பெரிய பெரிய வாக்கியம் அமைக்கலாம். 'ஆங்கிலப் பேராசானிலிருந்து ஒரு நீண்ட வாக்கியத்தை இங்கே படிப்படியாக வளர்த்துக் காண்பிக்கிறோம். கவனித்துப் படியுங்கள். (ஆங்கிலப் பேராசான் பக்கம் 476-478 காண்க)

1. Machines are expensive.
மேலே உள்ள வாக்கியத்தின் முதன்மையான பெயர்ச் சொல் 'machines'. இத்துடன் ஒரு தழுவுச் சொல்லைச் சேர்ப்போம்.

2. Sewing machines are expensive.
தையல் இயந்திரங்கள் அதிக விலையுள்ளவை. இதில் Sewing என்பது தலைமை பெயர்ச் சொல்லான machines என்பதை தழுவி நிற்கிறது.

3. Electric sewing machines are expensive
மின் சக்தியில் இயங்கும் தையல் இயந்திரங்கள் அதிக விலையுள்ளவை.
இதில் Electric என்னும் தழுவுச் சொல், 'sewing machines' என்னும் சொல்லமைப்பு (nominal construction) முழுவதையும் தழுவி நிற்கிறது.

4. Automatic electric sewing machines are expensive.
தானே வேலை செய்யும் மின் சக்தியால் இயங்கும் தையல் இயந்திரங்கள் அதிக விலையுள்ளவை.
இதில் Automatic என்னும் தழுவுச் சொல் 'electric sewing machines' என்னும் சொல்லமைப்பு முழுவதையும் தழுவி நிற்கிறது.

5. Enamel automatic electric sewing machines are expensive.
மெருகிடப்பட்ட தானே வேலை செய்யும் மின் சக்தியால் இயங்கும் தையல் இயந்திரங்கள் அதிக விலையுள்ளவை.
இதில் Enamel என்னும் தழுவுச் சொல் 'automatic electric sewing machines' என்னும் சொல்லமைப்பு முழுவதையும் தழுவி நிற்கிறது.

6. German enamel automatic electric sewing machines are expensive.
ஜெர்மானிய மெருகிடப்பட்ட தானே வேலை செய்யும் மின்சக்தியால் இயங்கும் தையல் இயந்திரங்கள் அதிக விலையுள்ளவை.
இதில் German என்னும் தழுவுச் சொல், 'enamel autematic electric sewing machines' என்னும் சொல்லமைப்பு முழுவதையும் தழுவி நிற்கிறது.

இந்த வாக்கியத்தை இப்படியே நீளமாக வளரச் செய்யலாம்.

7. Blue German enamel automatic sewing machines are expensive.
8. Rectangle blue German enamel automatic electric sewing machines are expensive.
9. New rectangle blue German enamel automatic electric sewing machines are expensive.
10. Tall new rectangle blue German enamel automatic electric sewing machines are expensive.
11. Attractive tall new rectangle blue German enamel automatic sewing machines are expensive.
12. Two attractive tall new rectangle blue German enamel automatic sewing machines are expensive.
13. Next two attractive tall new rectangle blue German enamel automatic sewing machines are expensive.
14. Those next two attractive tall new rectangle blue German enamel automatic sewing machines are expensive.
15. Both those next two attractive tall new rectangle blue German enamel automatic sewing machines are expensive.

அடுத்திருக்கும் கவர்ச்சி மிக்க உயரமான புதிய நீண்ட சதுர வடிவமுள்ள நீல நிறமான, ஜெர்மன் நாட்டின், மெருகேற்றப்பட்ட தானே வேலை செய்யும் மின் சக்தியால் இயங்கும் அந்தத் தையல் இயந்திரங்கள் இரண்டும் அதிக விலையுள்ளவை. (தமிழ் வாக்கியத்தில் சில தழுவுச் சொற்கள் இடம் மாறும்.)

*810 பக்கம் உள்ள 'ஆங்கிலப் பேராசா'னில் இது போன்ற உதாரணங்கள் ஏராளம்! ஏராளம்!!*



● வி. சிவா, மதுரை - 16.

? இம்ரான்கானின் புற்றுநோய் மருத்துவமனை நிதிக்காக லண்டனில் நடத்தப்பட்ட போட்டியில் பாகிஸ்தான் தீவிரவாதிகளின் வெறிச் செயலைப் பார்த்தீர்களா?

! மூன்றே ரன்களில் இந்தியா வெற்றி அடைய இருந்த நிலையில் காட்டுத்தனமாக மைதானத்தில் புகுந்து ரகளை செய்தவர்களை நிச்சயம் மன்னிக்கவே முடியாது. ஒரு நல்ல பணிக்கு நிதி திரட்ட முற்பட்ட இம்ரானுக்கு இழுக்குத் தேடி வைத்து விட்டார்கள்.

● எஸ். கே. ராமசாமி, சென்னம்பட்டி. ❑

? தமிழக அரசுக்குத் தங்கள் மீது அப்படி என்ன கோபம்? அரசு நூலகங்களில் இருக்கக் கூடாத சில இதழ்களின் வரிசையில் தங்களையும் சேர்த்து விட்டார்கள்?

! விருப்பு வெறுப்பின்றி ஜனநாயகப் பணியாற்றி வருவது கல்கி. தனி நபர்களைத் தாக்காமல் அவர்களது செயல்பாடுகளை மட்டுமே சமுதாயக் கண்ணோட்டத்தில் விமர்சிக்கிறது. 'கண்ணியமான பத்திரிகை' என்று அனைவராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. அவ்வாறிருந்தும் தங்களை விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர்களாக எண்ணும் போக்கில் ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர் இதை நூலகங்களில் தடை செய்யும் போது தங்களைத் தாங்களே சிறுமைப்படுத்திக் கொள்கிறார்கள். தங்களது ஜனநாயக விரோதப் போக்கைக் காண்பித்துக் கொள்கிறார்கள். மக்கள் சக்திதான் இதையெல்லாம் முறியடிக்க வேண்டும்.



● ஷ்யாம் கண்ணன், திருச்சி.

? 'வாழப்பாடி, வாழ்த்துப் பாடி, வசைபாடி' இம் மூவரில் யார் தமிழக காங்கிரஸுக்குப் பொருத்தமானவர்?

! எதற்கு வம்பு என்றுதான் மூன்றுமாக விளங்கி, சமயத்துக்கேற்ப நடந்து கொள்கிறார் தமிழக காங்கிரஸ் தலைவர்!

● எல். மாறன், மேல்பட்டி.

? 'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது' என்று பார்த்தால், தனி நாடு கோரிக்கையை விடுத்து, மாநில சுயாட்சியே போதும் என்ற நிலைக்கு வந்து விட்டதே?

! இதில் தவறில்லை. யதார்த்த நோக்கில் செயல்படுவதே விவேகம். ஜென்மப் பகைவர்களாகப் போராடியவர்கள், இஸ்ரேல் - பாலஸ்தீன ஒப்பந்தம் வாயிலாக இணக்கம் காணவில்லையா! பாலஸ்தீனியருக்குச் சுயாட்சி உரிமை இடைக்க அராஃபத் வழி வகுக்கவில்லையா?

● ஜே. பலராமன், சீர்காழி.

? பெண்களை நம்பலாமா?

! ஆண்களை நம்புமளவுக்கு நம்பலாம். ஊழல் செய்வதில் இருபாலாருமே இல்லாடிகள்தாம்.

● சையத் அலி, திருச்சி.

? பொதுத் துறைகளில் சிலவற்றைத் தனியாருக்கு விற்க முயற்சி நடப்பது உண்மையா?

! அதை எதிர்த்துத்தான் போராட்டம் நடத்துகிறார்களே. ஆனால் எந்த ஒரு பொதுத் துறை ஊழியரும் ''நாங்கள் இனி கடுமையாக உழைத்து லாபம் காண்போம்; அதற்கு ஒரு காலக்கெடு நிர்ணயிக்கலாம்; அதன் பிறகு பங்குகளைத் தனியாருக்கு விற்பது பற்றி யோசிக்கலாம்'' என்று சொல்ல முன்வரவில்லையே, ஏன்? யோசியுங்கள்!



● பி. பிரான்சிஸ், கும்பகோணம்.

? ''அந்த ஏழு பேரைக் கட்சி மாற ஏற்பாடு செய்தவன் தானே'' என சுவாமி கூறுகிறாரே?

! அப்புறம் ஏன் அவரை 'ஜெ' அரசியல் தரகர் என்று சொல்ல மாட்டார்? அதற்குக் கோபப்படுவானேன்?

# தமிழக அரசுக்கு



ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். கே. ராமசாமி,
சென்னம்பட்டி (அஞ்சல்)
குருவரெட்டியூர் (வழி)
பவானி வட்டம் - 638 504.

● அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

? வைஜயந்தி மாலாவுக்கு ராஜ்யசபா எம்.பி. பதவி கிடைத்திருப்பது பற்றி...?

! பதவி போன பிறகு வீட்டைக் காலி பண்ணச் சொல்ல முடியாத கையாலாகாத நிலையில் பதவியைத் திரும்பத் தந்து பிரச்னையைத் தீர்த்து விட்டார்கள் போல!

● சுபாஷிணி, திருவெண்ணெய் நல்லூர்.

? காதல் நோய் என்றால் என்ன? அதைத் தவிர்க்க உங்கள் யோசனை?

! பாரதியின் 'கண்ணன் என் காதலன்' படித்துப் பாருங்களேன், (தூண்டிற் புழுவினைப் போல்) விளங்கும். அது சரி, எதற்குத் தவிர்க்க வேண்டும்? தவிர்க்க முடியுமானால் அது காதலே அல்லவே!

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.

? இதுவரை நியமிக்கப்பட்ட விசாரணைக் கமிஷன்களின் அடிப்படையில் எந்த ஒரு நடவடிக்கையுமே தமிழகம் இதுவரை சந்திக்காத நிலையில், நிலக்கரி இறக்குமதி சம்பந்தப்பட்ட விசாரணைக் கமிஷன் மட்டும் என்ன சாதித்து விடப் போகிறது?

! இது என்னய்யா கேள்வி! விசாரணைக் கமிஷன் வைப்பதே நடவடிக்கை எடுக்காமல் நழுவத்தானே! அதைத்தான் இப்போதும் தமிழக அரசு செய்யப் போகிறது!



● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'ஜாதி தேவை, ஜாதி பேதம் தேவையில்லை' என்கிறாரே கலைஞர்?

! 'எல்லோரும் ஒரே ஜாதி; அது மனித ஜாதி' என்பதில் கலைஞருக்கே நம்பிக்கை இல்லாமல் போனது ஆச்சர்யம்தான்.





● தெ. சு. திலீபன், வத்திராயிருப்பு.

? 'இனிமேல் காங்கிரஸ், குட்கேனைத் தன் சின்னமாக வைத்துக் கொள்ளலாம்' என்று அத்வானி கூறுகிறாரே?

! அப்போ, பி.ஜே.பி. என்ன, கடப்பாறைச் சின்னமா வைத்துக் கொள்வது?

● ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? 'காஷ்மீருக்குச் சென்று கலவரத்தை அடக்கத் தயார்' என்று பஞ்சாபில் கே.பி.எஸ். கில் அறிவித்துள்ளாரே?

! மத்திய அரசு கூட இந்த ரீதியில் யோசித்து வருகிறதாம். ஆனால் 'சூப்பர் காப்' இடம் மாற, பஞ்சாப் மறுபடி காஷ்மீர் போல் ஆகிவிடாமலிருக்க வேண்டுமே!

## ...ல்கி மீது என்ன கோபம்?

# புதுமைத் திட்டம் No. 3
# "லில்லி" உள்பாவாடைகள்

## திட்டத்தின் விபரம் :

1. ரூ. 300/-ஐ D.D. அல்லது M.O. மூலம் P.R.C. கார்மெண்ட்ஸ் என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள். இத் திட்டத்தில் முதலில் வரும் 5000 உறுப்பினர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

2. பணம் கிடைக்கப் பெற்றவுடன் உடனடியாக ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) உங்களுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

3. நீங்கள் பணம் செலுத்தியதிலிருந்து ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகள் (Normal Size) ஆண்டுக்கு ஒருமுறை வீதம் தொடர்ந்து ஆறு ஆண்டுகளுக்கு பதிவுத் தபால் மூலம் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கப்படும்.

4. பணம் கிடைக்கப் பெற்ற தேதியிலிருந்து 84 மாதங்கள் (7 ஆண்டுகள்) நிறைவு பெற்றவுடன் ரூ. 600/- ஆக உங்களுக்கு வழங்கப்படும்.

5. நீங்கள் பணம் செலுத்தியவுடன் ரூ. 84/- மதிப்புள்ள இரண்டு 'லில்லி' உள்பாவாடைகளுடன் (Normal Size) 7 ஆண்டுகள் கழித்து ரூ. 600/- திரும்பப் பெறுவதற்கான Repayment Gaurantee Card உடனடியாக வழங்கப்படும்.

| | நீங்கள் செலுத்தும் தொகை | பணம் செலுத்தியவுடன் | முதலாம் ஆண்டு இறுதியில் | இரண்டாம் ஆண்டு இறுதியில் | மூன்றாம் ஆண்டு இறுதியில் | நான்காம் ஆண்டு இறுதியில் | ஐந்தாம் ஆண்டு இறுதியில் | ஆறாம் ஆண்டு இறுதியில் | 7 ஆண்டு முடிந்தவுடன் திரும்ப பெறும் தொகை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| Normal Size அதிகபட்ச இடுப்பு சுற்றளவு 36"/89cm | ரூ 300/- | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ.84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 84/- மதிப்பு | ரூ 600/- | ரூ 1188/- |
| Spl Size அதிகபட்ச இடுப்பு சுற்றளவு 40"/102 Cms. | ரூ 350/- | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 100/- மதிப்பு | ரூ 700/- | ரூ 1400/- |

Normal Size, மற்றும் Spl. size-ல் கிடைக்கும் உயரங்கள் : 90, 95, 100 & 105 செ.மீ.

*பங்கு கொள்வீர்!* *பயன் பெறுவீர்!!*

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

## P.R.C. கார்மெண்ட்ஸ்

*26, பிரதட்சணம் ரோடு, 'ஏ' பிளாட்,*
*கரூர் - 639 002.* *போன் : 21946*

எங்கள் நிறுவனம் 1984-ல் பாரத பிரதமரின் படித்த இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் கரூர் கிளை கனரா வங்கியின் பொருளாதார உதவியுடன் துவக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

குறிப்பு :
- ★ நீங்கள் செலுத்தும் தொகை முழுமையாக, 65 ஆண்டுகளாக மக்கள் சேவையில் ஈடுபட்டிருக்கும் கரூர் 'தி லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிட்'-ல் டெபாசிட் செய்யப்படும்.
- ★ மேற்படி டெபாசிட் தொகையிலிருந்து எங்கள் நிறுவனத்தின் நடைமுறை மூலதனத்திற்காக (Working Capital) வங்கியிலிருந்து கடன் வசதி பெற்றுக் கொள்ளப்படும்.
- ★ Spl. Size (ஸ்பெஷல் சைஸ்) வேண்டுவோர் ரூ. 350/- செலுத்தவும்.
- ★ உங்களுக்கு தேவையான கலர் மற்றும் அளவுகளை குறிப்பிட்டு எழுதினால் அதன் படி அனுப்பி வைக்கப்படும்.
- ★ வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் இத் திட்டத்தில் பங்கு பெறலாம். 'லில்லி' உள்பாவாடைகள் மற்றும் இதர கடிதத் தொடர்புகள் அவர்களுடைய இந்தியாவில் உள்ள விலாசத்திற்கு மட்டுமே அனுப்பி வைக்கப்படும்.

# உண்ணா விரதம் இருப்போம்!

●● "ச்சே... வர வர எது எதுக்குத்தான் டெண்டர் விடறதுன்னு விவஸ்தை இல்லாம போயிடுச்சி..."

"எதைச் சொல்றீங்க...?"

"பின்னே என்ன...! அடுத்து வர ஆண்டிலே தலைவர் இருக்கப் போற உண்ணா விரதத்துக் கெல்லாம், பந்தல் போடுற காண்ட்ராக்டுக்கு டெண்டர் விட்டிருக்கறாருய்யா...!"

- புதுவண்டி ரவீந்திரன்

●● "சாகும்வரை உண்ணாவிரதம்னு அறிவிச்சது தப்போன்னு இப்பத் தோணுது!"

"ஏன்?"

"கடைசி வரையிலும் யாருமே கண்டுக்காம இருந்துட்டாங்கன்னா என்ன செய்யறதுன்னுதான்!"

●● "மெல்லவும் முடியலே... விழுங்கவும் முடியலே... என்ன செய்யலாம் டாக்டர்...?"

"ஏதாவது காரணத்தைச் சொல்லி... உண்ணா விரதம் இருங்க!"

●● "உண்ணாவிரதத்தை நான் கைவிட எதிர்க்கட்சிக்காரங்க சூழ்ச்சி பண்றாங்க!"

"எப்படி...?"

"கொழுத்த ஆட்டை எனக்கு எதிரில் கொண்டு வந்து கட்டித்தான்!"

●● "இப்ப எதுக்கு உண்ணாவிரதம் இருக்கீங்க...?"

"நாளைக்கு வாங்க சொல்றேன்..."

"ஏன் அப்படி?"

"அதற்குள் எப்படியும் ஒரு காரணத்தைக் கண்டு பிடிச்சிடுவேன்!"

- வி. ஆர். கிருத்திகா





## 8

# மடியில் தலை வைத்து

**க**ஸ்தூரிரங்கன் ஒருகணம் தாமதமாகத் தான் சுசீதா அழுவதைக் கவனித்தான். பாட்டிகள் எல்லோரும் சாப்பாட்டிலும், ரங்கனிலும் கவனத்தைப் பதித்திருந்தார்கள் என்பதால் அவர்கள் யாரும் சுசீதாவைக் கவனிக்கவில்லை.

ரங்கனுக்கு ஏதோ ஓர் உள்ளுணர்வு உணர்த்தி, கண்ணோரத்தில் பார்த்த போது, அவள் அழுது கொண்டிருந்தது தெரிந்தது.

''சுசீதா'' என்றான். குரலில் லேசான கவலை இருந்தது. சுசீதா காலையில் இருந்து சாப்பிடவில்லை. பசி மயக்கத்தில், கஸ்தூரி ரங்கன் அவளைக் கவனிக்காமல், இந்த கிழவிகளின் நடுவில் தன்னையே மறந்து போய் உட்கார்ந்திருக்கிறானே என்று அவள் நினைத்து விட்டாளோ என்று தோன்றியது.

நீரும் நெருப்பும் என்று அவளைப் பற்றி நினைத்தது ஒன்றும் தப்பில்லை என்று தோன்றியது.

''சுசீதா... என்ன சுசீதா?'' என்று கேட்டுக் கொண்டே அவன், அவள் பக்கம் திரும்பி நடந்தான்.

சுசீதாவிற்கு அவனது அசைவு தெரிந்தது. தன்னிலை மறந்து அழுவது தெரிந்தது.

அத்தனை பேருக்கு நடுவில், கஸ்தூரி ரங்கன் 'என்ன?' 'ஏது?' என்று கேள்விகளாய்க் கேட்பான். பதில் சொல்ல அவளுக்குத் தைரியம் இல்லை.

அவன் அழைத்ததற்குப் பதில் சொல்லாமல் வெளியே போய்க் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

காரில் உட்கார்ந்தும் இருப்புக் கொள்ளவில்லை. பொங்கிப் பொங்கி அழுகை வந்தது.

உள்ளே ரங்காவை அவர்கள் கேள்வி கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

'யாரு ரங்கா அது?'

கஸ்தூரிரங்கன் என்ன பதில் சொல்லுவான்?

'அது ஒரு ஓரலை. நீரும் நெருப்பும். இடீர்னு சிரிக்கும். இடீர்னு அழும். ரெண்டுங்கெட்டான்! கஷ்டமர்னு வந்து சேந்தது. ஒட்டிக்கிட்டு உயிரெடுக்குது.'

இல்லை கஸ்தூரி! இல்லை ரங்கா! நான் நன்றாக இருந்தேன். என் நினைவுகள் தெளிந்திருந்தன. என் சிந்தனை நிர்மலமாய் இருந்தது. நான் கபடற்ற முழு நிலவாய் இருந்தேன். நான் கறந்த பாலாக இருந்தேன்.

எல்லாமே மாறிப் போய் விட்டது.

ரங்கா நான்... நான்... நான்...

சுசீதாவிற்கு மறுபடி அழுகை குமுறிக் கொண்டு வந்தது. ஏன் அழுகிறோம்? பதில் தெரியவில்லை. இல்லை, இல்லை. பதில் தெரிந்திருந்தது!

நிராகரித்து விட்டால் கேலிப் பொருளாகி விடுவோமோ என்ற பயம். அழகான ஓவியம் அங்கங்கே நீட்டப்பட்டு, குறுக்கப்பட்டு கேலிச் சித்திரமாய் மாறி விடுமோ என்ற பயம்.

பயப்படாதே சுசீதா!

உலகில் அன்புக்கு சமமானதும் அன்பு தான். அன்புக்கு எதிர்ப்பதமானதும் அன்பு தான்.

உன்னைப் போயா... கண்ணுள்ளவர்கள் யாரும் சொல்லி விட முடியுமா என்ன?

ஏன்? நான் எந்த வகையில் உயர்ந்தவள்? நான் தெரசா இல்லை. நான் மேதா பட்கர் இல்லை. ஜான்சிராணி இல்லை. சுசீதா. வெறும் சுசீதா.

''சுசீதா''

கஸ்தூரிரங்கன்தான்.

மென்மையாகக் கூப்பிட்டான். சிறகால் மெல்லக் கன்னத்தை வருடுவது போல. நிமிர்ந்து பார்த்தாள். கார் ஜன்னல் வழியே அவன் முகம் கம்பீரமாய்த் தெரிந்தது. கொஞ்ச நேரம் அந்த முகத்தைப் பார்த்தால், அந்த முகத்தில் தான் தொலைந்து விடுவோம் என்று அவளுக்குத் தோன்றியது.

கண்களைத் தாழ்த்திக் கொண்டாள்.

கஸ்தூரிரங்கன் கார்க்கதவைத் திறந்தான். வெகு இயல்பாக டிரைவிங் சீட்டில் உட்கார்ந்தான்.

**"எ**ங்க போகட்டும்?''

''எங்க வேணா'' என்றாள் சுசீதா, மெல்லிய குரலில்.

அவன் காரைக் கிளப்பினான். கியர் போடுவதை வெகு அனாயாசமாகச் செய்தான். அவனது

சுபா

புறங்கையில் புசுபுசுவென்று வளர்ந்து அறுவடைக் கதிராய் வளைந்திருந்த முடி, அவளுள் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

அவன் ஏதாவது பேசுவான் என்று எதிர்பார்த்தாள். அவன் காரைச் செலுத்துவதிலேயே கவனமாக இருந்தான்.

கார் நின்ற பிறகுதான் அவன் காரை சபரிக்குச் செலுத்தி வந்திருக்கிறான் என்பதை கீதாவால் உணர முடிந்தது.

சபரி அருகே மணல்வெளிக்குப் பக்கத்தில் காரை நிறுத்தி விட்டு, 'ஹாங்க்' என்று ஒரு ஹாரன் கொடுத்தான்.

சபரியில் இருந்து கையில் ட்ரேயுடன் ஆர்டர் எடுக்க ஓடி வந்த பையன், டிரைவிங் சீட்டில் கஸ்தூரிரங்கனைப் பார்த்து விட்டு ஆச்சரியப்பட்டான்.

''போடா. ரெண்டு நல்ல காப்பி கொண்டு வா.''

''நான் இன்னிக்கு எதுவும் சாப்பிட மாட்டேன்.''

''காப்பி குடிச்சாத் தப்பில்ல. உங்களால நானும் காலைலேர்ந்து ஒண்ணும் சாப்பிடலை. நீங்க காப்பி சாப்ட்டாத்தான் நானும் சாப்புடுவேன்.''

''சரி''

''சரின்னா? காப்பி குடிக்கறேன்னு அர்த்தமா, என்னையும் காப்பி குடிக்காதேன்னு சொல்றதா அர்த்தமா?''

''குடிக்கறேன்னு''

''போயேண்டா''

கார் ஜன்னல் வழியே அவன் முகம் கம்பீரமாய்த் தெரிந்தது. கொஞ்ச நேரம் அந்த முகத்தைப் பார்த்தால், அந்த முகத்தில் தான் தொலைந்து விடுவோம் என்று அவளுக்குத் தோன்றியது.



காப்பி நன்றாக இருந்தது. சஜீதா முதல் உறிஞ்சலில் நாக்கைச் சுட்டுக் கொண்டாள். நுனி சிவந்த நாக்கால் உதடுகளை மெல்ல நீவி விட்டது பார்க்க வெகு கவர்ச்சியாய் இருந்தது.

''என்ன ஆச்சி சஜீதா?''

''எது?''

''ஏன் அழுநீங்க?''

''புரியலையா?''

''ம்ஹூ¨ஹூ¨ம்''

''விசாலிப் பாட்டி சொன்னது சரியாத்தான் இருக்கு''

''என்ன சொன்னாங்க''

''தூங்கறவங்களை எழுப்பிடலாம். தூங்கற மாதிரி நடிக்கிறவங்களை எழுப்பறது கஷ்டம்னு''

''நான் தூங்கற மாதிரி நடிக்கிறேனா?''

''ஆமா. ஆமா. ஆமா. நீங்க ரொம்ப அழுத்தமான ஆளு. ஆம்பளைங்கற நெனப்பு அதிகமா இருக்கற ஆளு. ஆம்பிளை என்ன விட்டுக் குடுக்கறது? பொம்பளைதான் விட்டுக் குடுக்கட்டுமேன்னு மஹா கம்பீரமா சிம்மாசனத்தில உக்காந்துக்கிட்டிருக்கற ஆள். நான் உருகறேன்னு தெரிஞ்சிக்கிட்டும் தெரியாத மாதிரி பாவனை பண்ற ஃப்ராடு. எப்ப என்னைப் பார்த்தாலும் ரெண்டடி தள்ளி நிறுத்தி, 'எங்கிட்ட வர ஒனக்கு என்ன அருகதை இருக்கு'ன்னு கேக்கற ஆளு. எப்பப் பேசினாலும் 'வாங்க, போங்க'ன்னு பேசி என் உயிரை எடுக்கற ஆளு. பெரிய ஐடியலிஸ்ட்னு நெனப்பு மனசில. விசாலிப் பாட்டி சொன்னாங்களே. என் ரங்காவுக்கும் கல்யாணம் ஆகல்லேன்னு. எனக்குக் கல்யாணம் ஆய்டிச்சா, இல்லியான்னு கேட்டுத் தெரிஞ்சிக்கிட்டு. அவுங்க ஏன் அப்படிச் சொல்லணும்? தூங்கற மாதிரி நடிக்கறவங்களை எழுப்பறது கஷ்டம்னு என்னைப் பாத்து ஏன் சொல்லணும்? உங்களைப் பாத்து சொல்லணும். ஒரு பொண்ணோட மனசு புரிஞ்சும், புரிஞ்சுக்காத மாதிரி பிஹேவ் பண்ற மரப்பாச்சி பொம்மை நீங்க. வெக்கம், மானம், சூடு, சொரணை எல்லாத்தையும் விட்டு நானே சொல்றேன். ஐ லவ் யூ. ஐ லவ் யூ. யூ சில்லி ஃபூல். நான் உங்களைக் காதலிக்கறேன். போதுமா? இனிமே 'வாங்க சஜீதா, போங்க சஜீதா, உக்காருங்க சஜீதா'ல்லாம் வேணாம். இவ்வளவு அப்பாவித்தனமா மூஞ்சியை வெச்சிக்கிட்டு என்னை முட்டாளாக்க வேணாம். அனாதைப் பாட்டிங்களை வேலைக்கு வச்சிப்பாராம். வாழ்வு இல்லாத ஃப்ரெண்டைக் கொண்டு வந்து சீஃப் குக்கா இருன்னு சொல்வாராம். ஏழைப் பசங்களை சர்வராக்கி 'ரங்கா' 'ரங்கா'ன்னு கூப்பிட வப்பாராம். கோவமே பட மாட்டாராம். இந்த புத்தர் வேஷமெல்லாம் என்கிட்ட வேணாம். என்னைப் புடிக்கலை? என் மூஞ்சியைப் பார்த்து மனசாரச் சொல்லுங்க. என்னைப் புடிக்கலை?''

சொல்லி விட்டு சஜீதா மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

கஸ்தூரிரங்கன் பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தான். சஜீதாவா இது? சூடேறிப் போன மக்காச்சோளம் மாதிரி, எண்ணெயில் போட்ட கடுகு மாதிரி...

'ஹோட்டல்காரா, ஹோட்டல்காரா... எப்போதுமே இப்படியா உதாரணம் தேடுவாய்?'

அவனுக்கு தர்மசங்கடமாய் இருந்தது. சஜீதாவை அவனுக்குப் பிடிக்கவில்லை என்று சொல்ல முடியாது. உலகத்தை நேசிப்பதை விட, உலக வாழ்வை நேசிப்பதை விட, அதிகமாக அவளை உள்ளூர நேசித்தான்.

ஆனால் எப்படிச் சொல்ல முடியும்?

அவன் எங்கே? சஜீதா எங்கே?

அவளை நேசித்தால் போதுமா? அவளை மணம் செய்து கொள்ள வேண்டாம்? அவளோடு தன் வாழ்க்கையை இணைத்துக் கொள்ள வேண்டாம்?

அவனுடைய உண்மையான முகத்தைப் பற்றி அவள் தெரிந்து கொண்டால், சஜீதா அப்புறமும் அவனோடு சேர்ந்து வாழச் சம்மதிப்பாளா?

அவன் சஜீதாவின் பக்கம் திரும்பினான். இப்போது சஜீதா தைரியமாக அவன் முகத்தைப் பார்த்து நிமிர்ந்து உட்கார்ந்திருந்தாள்.

அவள் கண்கள், அவன் கண்களைச் சந்தித்த போது அந்தக் கண்கள் தாழவில்லை. வெட்கவில்லை. நிலம் நோக்கவில்லை. மாறாக மின்னின. ஒரு எதிர்பார்ப்புடன் அவன் சொல்லப் போகும் பதிலுக்காக, அவன் முகத்தில் ஆவலுடன் தோழமையைத் தேடின.

அவனுக்கு மனதில் வலித்தது. சஜீதா தான் உனக்கு ஒவியமாகத் தெரியலாம்.

அதிகாரி : 'தண்ணியில்லாக் காட்டுக்கு மாத்திடுவேன்'னு மிரட்ட முடியலை சார், இப்போ!
மேலதிகாரி : ஏன்?
அதிகாரி : தண்ணியுள்ள ஊரே இப்போ கிடையாதே சார்!

– தக்கோலம் அ. முஸ்தபா



# இத்தனை நாளா

# இது தெரியாமல் போயிடுச்சே!...

பணம் எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை, குழந்தைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் எனத் தீர்மானித்து, பிள்ளைகளைக் கான்வென்டில் சேர்த்தோம்.

அலுவலகக் விஷயமாக என் கணவர் அடிக்கடி 'டூர்' போய்விடுவதால், குழந்தைகளது படிப்பு விஷயத்தில் நான்தான் கவனம் செலுத்த வேண்டியிருந்தது.



ஆனால், எனக்கு இங்கிலீஷ் அவ்வளவாகத் தெரியாத காரணத்தினால், டீச்சர்களிடம் குழந்தைகளது படிப்பு பற்றி விசாரிக்க முடியாமலும், பாட சம்பந்தமாகக் குழந்தைகள் கேட்கும் சந்தேகங்களுக்கு பதில் சொல்ல முடியாமலும் நான் பட்ட அவஸ்தை சொல்லி மாளாது.

பம்பாயிலிருந்து வந்திருந்த என் அத்தை பெண்ணிடம் இதுபற்றி பேசிக் கொண்டிருந்தபோது, "கல்யாணமாகி பம்பாய் போன புதிதில் நானும் உன்னைப் போல இங்கிலீஷ் பேச முடியாமல் திண்டாடினேன்.

விவேகானந்தா கல்வி நிலையம் பற்றி கேள்விப்பட்டு, அவர்கள் நடத்தும் 'கரஸ்பாண்டன்ஸ் கோர்ஸில்" சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக்கொண்டேன். தமிழ் நாட்டில் வசிக்கும் உனக்கு இந்த 'கோர்ஸ்' பற்றி தெரியாமல் போய்விட்டதே என்று கோபித்துக் கொண்டாள்.

உடனே, நான் விவேகானந்தா கல்வி நிலையத்திற்கு ஒரு போஸ்ட் கார்டு எழுதிப் போட்டேன்.

பயிற்சி விபரங்கள் கிடைத்த மறு வாரமே, 'கோர்ஸில்' சேர்ந்தேன்.

பாடங்கள் எல்லாம் ஈஸியா புரியற மாதிரி, ரொம்ப சிம்பிளா இருந்ததால், நேரம் கிடைக்கும் போதெல்லாம் பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் செய்தேன்.

இப்போ என்னால, பயமில்லாம சகஜமா இங்கிலீஷில் பேச முடிகிறது. குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இந்த கோர்ஸ் எனக்கு ரொம்ப 'யூஸ்ஃபுல்லா' இருக்கு.

இத்தனைநாளா இந்த கோர்ஸ் பத்தி தெரியாம போயிடுச்சேன்னு வருத்தமா இருந்தாலும், இப்போவாவது இந்த கோர்ஸ்ல சேர்ந்து இங்கிலீஷ் பேசக் கத்துக்கிட்டோமேன்னு ரொம்ப சந்தோஷமா இருக்கு. — Mrs. துர்கா பிரசாத்

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"
இன்றே தொடர்பு கொள்ளுங்கள்.



**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-17.

ஆனால் நான் வரையப்பட்டவன். எப்படிச் சொல்வேன் உன்னிடம்?

வண்ணக் கலயங்களில் உள்ள சிவப்பும், பச்சையும், நீலமும், மஞ்சளும், ஓவியம் வரைவோனின் திறமையால், வானமாகி, வாவியாகி, மலராகி, மாதாகி, கனியாகி, பிள்ளையாகி, அருவியாகி, அல்லியாகிறது. வண்ணக் குழம்பின்றி ஓவியம் இல்லை என்பது சரிதான். அதற்காக வண்ணக் குழம்பே ஓவியமாகி விட முடியுமா?

கஸ்தூரிரங்கன் கார்க்கதவைத் திறந்து கொண்டு இறங்கினான். கவிதா இப்போது வெட்கப்படாமல் அவன் பின்னாலேயே இறங்கினாள். மெல்ல நடந்தான்.

''பேசாமப் போனா எப்படி?'' என்றாள் கவிதா மெல்லிய குரலில்.

கஸ்தூரிரங்கன் நின்றிருந்த இடத்திற்குப் பக்கத்தில் மணலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மரக்கூண்டில் இருந்த ஆறு முயல்களும் தத்தம் காதுகளை உயர்த்தி, பின்னங்கால்களால் அமர்ந்து கஸ்தூரி ரங்கன் என்ன பதிலைச் சொல்லப் போகிறானோ என்று அவனைப் பார்த்தன.

ரங்கா குனிந்து தழையுடன் இருந்த காரட் ஒன்றை எடுத்து அந்த முயல்களுக்குக் கொடுத்தான்.

''கவிதா, ஒனக்கு என்னைப் பத்தி எதுவுமே தெரியாது''

''தாங்க்ஸ்! இப்பவாவது என்னை உரிமையோட கூப்டீங்களே''

''இருக்காலும் நம்ம
தலைவருக்கு மூன்
யோசனை அதிகம்!''
''எப்படிச் சொல்றீங்க?''
''அடுத்த ஒரு மாதம் வெளிநாடு
போறாராம். அதனால் தினமும்
ஒரு அறிக்கை விடச் சொல்லி
முப்பது அறிக்கைகளை
அட்வான்ஸாக எழுதிக்
குடுத்துட்டார்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்



''ப்ச். நான் சின்னப் பையனா இருக்கறப்பவே எங்கப்பா மிலிட்டரில சேர்ந்து சண்டைல குண்டு பாய்ஞ்சி செத்துப் போய்ட்டார் கவிதா''

''அதனால என்ன?''

''அப்பாவோட ஒடம்பைப் பாக்கறதுக்கு எங்கம்மா பெருமாள்தேவன்பட்டிங்கற எங்க கிராமத்திலேர்ந்து ஸ்ரீநகர் வரைக்கும் போனாங்க. அப்பாவோட ஒடம்பைப் பார்த்த உடனேயே அவங்களும் செத்துப் போய்ட்டாங்க.''

''அதனால என்ன?'' என்று கேட்டாள் கவிதா. அவள் லவ் பேர்ட்ஸ் கூண்டருகே நின்றிருந்தாள். முகத்தைச் சுழித்து கிளிகளுக்குப் பழிப்பு காட்டினாள். அவை 'கிக்கீ கிக்கீ' என்றன. அவையும் பழிக்கின்றனவா? பாராட்டுகின்றனவா?

எப்படியிருப்பினும் சரி, கவிதாவிற்கு மகிழ்ச்சியாய் இருந்தது. ரங்கா எனும் இறுகிய பாறை, மரச்சிற்பம் தன் இயல்பில் இருந்து மாறியிருக்கிறது.

''அம்மா, அப்பான்னா என்ன, சாவுன்னா என்ன, வாழ்வுன்னா என்ன? இதெல்லாம் தெரியற வயசுக்கு முன்னாலேயே நான் அனாதையாய்ட்டேன். என்னை என் மாமா ஒருத்தர்தான் வளத்தாரு. படிக்க வச்சாரு''

''ரங்கா. நான் அதெல்லாம் கேட்டேனா?''

''நான் சொல்லணும் இல்லியா?''

''சொன்னீங்க. கறைக்காய்க்கு உப்பில்லன்னு. நீங்க அனாதை. ஆல் ரைட். அதனால யார் அனாதையாயிருந்தாலும் உங்க மனசு இரக்கப்படும். கொண்டு வந்து வெச்சிக்கிட்டுக் காப்பாத்துவீங்க. அதெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். நான் கேட்டது என்ன? ஐ லவ் யூ ரங்கா. ஐ லவ் யூ ஸோ மச்''

''ஒத்து வராது கவிதா''

''ஏன்?''

''அப்பா!''

''கவலை விட்டதுன்னு நெனைப்பாரு. பிஸினஸைக் கவனிப்பாரு. முழுமூச்சா பணத்தைத் துரத்துவாரு. அப்பாகிட்ட சம்மதம் வாங்கறது என் வேலை. நீங்க என்னை... லவ்... பண்றீங்களா... இல்லையா?''

''ப்ளீஸ் கவிதா. என்னை விட்டுடு. என்னால இப்ப பதில் சொல்ல முடியாது''

''எப்ப சொல்வீங்க?''

''நாளைக்கு வா. இதே நேரத்துக்கு. இங்கயே வா. சொல்றேன்''

''ப்ளா... ப்ளா... ப்ளா... சாமியாரே.. நாளைக்கு நீங்க காவியைத் தூக்கிப் போட்டுட்டு கலர் ட்ரஸ் மாட்டலை...? நான் என்ன செய்வேன்னு எனக்கே தெரியாது. வரேன்''

கவிதா சட்டென்று திரும்பி நடந்தாள்.

(தொடரும்)

# வட்டமேஜை

## பிரச்னையை திசை திருப்புகிறார்!

◆ இந்தியாவின் கலாச்சாரமே மத அடிப்படையில்தான் உள்ளது. நம் பண்பாட்டிலிருந்து மதத்தைப் பிரிக்கும் முயற்சியாக இருந்த இந்த மசோதாவைத்தான் பா.ஜ.க. எதிர்த்தது; ஓட்டு பயத்தில் அல்ல!

குடந்தை - 1, ஆர். ஸ்ரீதரன்.

(கும்பகோணம் - 1, ஆர். ஸ்ரீதரன்.)

◆ இந்திய மக்கள் மதங்களுக்கு அப்பாற்பட்டவர்கள், ஒருமைப்பாட்டிற்கு சிறந்த உதாரண கர்த்தாக்கள்! ஆனால் - துரதிருஷ்டம் அரசியல்வாதிகள் வடிவில் அடிக்கடி மக்களை இம்சிக்கிறது. ''ஒன்றே குலம் - ஒருவனே தேவன்'' என்ற அடிப்படை உணர்வு வேண்டும் என்ற தங்களின் கருத்து நூறு சதவீத உண்மை பொதிந்துள்ளது.

திருச்சி - 17, பி. பட்டுபாரத்வாஜ்.

◆ தேங்காய் உடைப்பவர் தேர்தலுக்கு நிற்கக்கூடாது என்பது பிரச்னை இல்லை. மத உணர்வின் பெயரால் ஓட்டு கேட்பதும் தெய்வத்தை தேர்தல் சுவரொட்டிகளில் அச்சிடுவதும் தெய்வம் போல் வேடம் போட்டுத் தேர்தல் பிரசாரத்திற்கு வருவதும் தேசிய ஒற்றுமைக்கு ஊறுவிளைவிக்கும் என்பதுதான் பிரச்னை. வாஜ்பாயி பிரச்னையை திசை திருப்புவது வருத்தம் அளிக்கிறது.

சிதம்பரம், ஆர். தமிழரசி தேவசேனாபதி.

◆ தியாக பூமி திரைப்பட போட்டோக்களுடன் வந்தால் இந்தத் தலைமுறையினருக்கும் சந்தோஷமாக இருக்குமே? ஏன் போட்டோ வெளியிடவில்லை?

திருநெல்வேலி, கே. ஜானகி.

(வண்ணத்தில் இராது என்பதுடன் அந்தப் பழைய திரைப்படங்கள் கிடைக்கவில்லை என்பதும் காரணம் - ஆர்.)



◆ ''மீண்டும் சாவித்திரி'' நாவல் முடியுமுன் ஆயிரம் முறை மன்னிப்புக் கேட்கக் கூட நான் தயார். ஆனால் அதற்குள் ஆயிரம் முறை உங்களைக் கொந்தளிப்பு அடையச் செய்து விடுவேனோ என்ற பயம்தான் எனக்கு அதிகமாகி விட்டது. ஏனெனில் என் எழுத்து, உங்களுக்கு என் பலவீனமாகத் தெரிகிறது.. ஆனால் அதை என் பலமாக நினைத்து நான் இயங்குகிறேன்.

சென்னை - 10, விக.

(விகவின் எழுத்து பலவீனமானது என்று நாம் கூறவில்லை. குறிப்பிட்ட பகுதியைத் தான் ஆட்சேபிக்கிறோம். விகவின் சக்திவாய்ந்த எழுத்துக்கு ஆபாசம் துணைபோக அவசியமில்லை என்று கருதுகிறோம். - தி.ஆர்.)

◆ கல்கி 29.8.93 இதழில் எம்.எல்.ஏ. லதா பிரியகுமார் அரக்கோணத்திலுள்ள தமிழ்நாடு ஸ்டீல் ஆலை நஷ்டத்தில் இயங்குவதாகவும் மேலும், விரிவாக்கம் செய்து என்ன செய்யப் போகிறார்கள் என்றும் பதில் அளித்துள்ளார். தமிழகத்திலேயே மிகவும் நவீனமான உருக்காலை கனிடன் நாட்டின் ஒத்துழைப்புடன் ஆரம்பமாகி இன்று வரை மிகவும் லாபகரமாகச் செயல்படுவதுடன் இந்தத் தொழிற்சாலையினை நம்பி குறைந்தது, நேரடியாகவும், மறைமுகமாகவும் மூவாயிரம் குடும்பங்கள் பிழைத்து வருகின்றன. சட்டமன்ற உறுப்பினருக்கு யாரோ தவறான செய்தியைச் சொல்லி இருக்கிறார்கள். மேலும் இந்நிறுவனம் அரக்கோணத்தின் வளர்ச்சியை முன்னிட்டு பல தொழிலகங்களுக்கும், சங்கங்கள் - காலனிகளுக்கும் பல நூறு ஏக்கர் நிலம் வழங்கி உள்ளது என்பதையும், தெரியப்படுத்துகிறேன்.

அரக்கோணம், டி. சுப்பிரமணி.

◆ ஆடியன்ஸின் 'டான்ஸ் சென்சேஷனல்' பிரபு தேவாவின் பதில்களில் அடக்கம் பளிச். அவர் ஆட்டத்தில்தான் ஜிம்னாஸ்டிக்கே தவிர பதில்களில் ஒரு தெளிவு தெரிந்தது. இனி ஒரு பாடல், ஒண்ணரை பாடலுக்கு ஆட மாட்டேன் என்ற அவரது முடிவு வரவேற்கத்தக்கது.

திண்டுக்கல், பி. ராமச்சந்திரன்.

◆ ''ஒரு உண்மையான காதலை யதார்த்தமான நடையில் கொண்டு சென்று - இடையிடையே சில சோகங்கள் இருந்தாலும் இனிக்கச் செய்து 'நினைவெல்லாம் உன்னோடுதான்' கதை மூலம் ஒரேயடியாக அசத்தி விட்டார் திருவாரூர் பாபு.

வலங்கைமான், பி. நூர்தீன்.

◆ கல்கி 5.9.93 இதழில் வெளியான போட்டிக் கதை 'கங்குமில்லை கரையுமில்லை'யை வித்தியாசமான வட்டார வழக்குத் தமிழில் எழுதி எங்கள் நெஞ்சை, கொள்ளை கொண்டு விட்டார் தாமரை செந்தூர்பாண்டி. பாராட்டுக்கள்.

திருவட்டார், தா. சிந்துகுமார்.

◆ தாலாட்டு படத்தின் ஒரே ஆறுதல் பாடல்கள் தான். இளையராஜா தூங்கி விட்டார் என்று நீர் குறிப்பிட்டிருப்பதிலிருந்தே நீர் உம் காதுகளில் பஞ்சை வைத்துக் கொண்டு படம் பார்த்திருப்பது தெரிகிறது!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

◆ பம்பாய் உண்மையிலேயே காதலிக்கப்படும் நகரம்தான் என்பதை கட்டுரை வாசித்த போது உணர முடிந்தது. இவ்வளவு இட நெருக்கடியிலும் சுறுசுறுப்பாய் இயங்கும் பம்பாய்வாசிகள் பாராட்டப்பட வேண்டியவர்கள்.

தோழகிரிப்பட்டி, ஆர். முத்துக்குமரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

## பகடையாட்டமா? பாதுகாப்பா?

# உங்கள் சேமிப்பை எங்கே டெபாசிட் செய்யப் போகிறீர்கள்?

**இதர நிறுவனங்களின் பில்களை டிஸ்கவுன்ட் செய்யும் ஒரு நிதி நிறுவனத்திலா? அல்லது**

**அளிக்கும் நிதியுதவியைத் திரும்ப வசூலிப்பதில் முழுவதுமாக வெற்றி பெறும் ஒரு நிறுவனத்திலா?**

**சி**ல நிதி நிறுவனங்கள் இதர நிறுவனங்களின் பில்களை டிஸ்கவுன்ட் செய்கின்றன. இவ்வாறு கடன் பெறும் அந்த இதர நிறுவனங்களின் பொருள்கள் சரிவர விற்பனையாகாவிட்டால், டிஸ்கவுன்ட் செய்யும் நிதி நிறுவனங்களின் பணப்புழக்கம் பாதிக்கப்படுகிறது. தொடர்ந்து இவ்வாறு நேரும்போது இந்நிதி நிறுவனங்களின் பிரச்னைகள் அதிகரித்து விடுகின்றன. இத்தகைய நிறுவனங்களில் உங்கள் டெபாசிட்டுகள் பாதுகாப்புடன் இருக்க முடியுமா?

ஆனால் ஸ்ரீராம் நிறுவனங்கள் அவ்வாறு அல்ல. அவை உங்கள் டெபாசிட் தொகை களை லாரிகளை வாங்குவதற்கு மட்டும் தான் தவணை முறை நிதியுதவியாக அளிக் கின்றன. அதுவும், சராசரியாக, 36 மாதத் தவணைகளில்தான்.

லாரிப் போக்குவரத்துத் தொழில் ரொக்க அடிப்படையிலேயே நடைபெறுகிறது. எனவே, லாரி உரிமையாளர் வாங்கிய கடனைக் குறிப்பிட்ட தவணைகளில் திருப்பிச் செலுத்தி விடுகிறார்.

ஸ்ரீராம் நிறுவனங்களும் மிகத் திறமையோடு இயங்குவதால் கொடுத்த கடனைத் திரும்ப வசூலிப்பதில் 100% வெற்றி யைப் பெற்று விடுகின்றன.

இவ்வாறு லாரிகளுக்குத் தவணைமுறை நிதியுதவி வழங்குவதில் ஸ்ரீராம் நிறுவ னங்கள் வெற்றிகரமாக இயங்குவதால்தான் முன்னணி லாரி தயாரிப்பாளர்களான டெல்கோ, அசோக் லேலண்ட் ஆகியோர் ஸ்ரீராம் நிறுவனங்களுடன் மிக நெருக்கமாக உறவு கொண்டுள்ளனர்.

பங்குதாரர்களின் எண்ணிக்கை அதிகரித் துள்ள போதிலும் தொடர்ந்து 25% டிவிடெண்ட் அளித்து வர முடிகிறது.

1,50,000 டெபாசிட்தாரர்கள் தங்கள் சேமிப்பை ஸ்ரீராம் நிறுவனங்களின் பொறுப்பில் நம்பிக்கையோடு வைத்திருக்கிறார்கள்.

ஸ்ரீராம் குடும்பத்தில் நீங்களும் ஒருவராகச் சேருவதற்கு இந்தக் காரணங்களே போதுமே!




**ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்**
**ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்**
**ஸ்ரீராம் சிடி யூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்**
மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், மூன்றாவது மாடி,
4, லேடி தேசிகாச்சாரி ரோடு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.
போன் : 4990960/4991363/4993768/
4993704/4990356.

ADWAVE/SGC/4600 TAM B



REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# பாரம்பரியச் சுவைக்கு ஈடில்லை, இணையும் இல்லை.

லியோ காபி — தோட்டப் பயிர்களில் 60 ஆண்டுகளுக்கு மேல் காபி பயிரிடுவதில் முன்னணியில் இருப்பவர்கள் வழங்கும் தரமான காபி

காபிக் கொட்டைகள் மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. நன்கு வறுத்து, தங்கள் முன்னிலையில் நவீன கிரைண்டர் மூலம் உடனுக்குடன் அரவை செய்து தரப்படுகிறது. செறிவான தூய காபியின் அசல் மணமும், சுவையும் மாறாமல் அப்படியே இருக்கவும் விஷேச கவனம் செலுத்தப்படுகிறது.

---

இவையும் கிடைக்கின்றன : எங்களுடைய சொந்தத் தோட்டத்தில் விளைந்த மிளகு மற்றும் ஏலக்காய் — தோட்டத்துப் புதுமையுடன்.....

---




லியோ
சுத்தமான ஃபில்டர் காபி

நிர்வாக அலுவலகம் :
லியோ காபி கிரைண்டிங் ஒர்க்ஸ்,
16, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர்,

Insight-3407